ஓம்.

பரப்ரம்மணே நமஃ.

# உலகம் சத்தா? அசத்தா? என்பது.

சத்து என்பது சத்தினிலக்கணம் கூறுகின்றது. சத்து யாண்டுமுள்ளது. சத்தெனினும் உள்ளதெனினு மொக்கும்.

அசத்து என்பது அசத்தினிலக்கணம் கூறுகின்றது. அசத்து யாண்டுமில்லது. அசத்தெனினும் இல்லதெனினு மொக்கும்.

சத்துக்கு உதாரணங் கூறுகின்றது; அது படம். படமென்னும் சொல்லும் அதன்றோற்றமும் பொருளுமுட னிகழ்வது. படமெனினும் ஆடையெனினு மமையும்.

அசத்துச் சொல்மாத்திர மாதற்கு உதாரணங் கூறுகின்றது; அது மலடிமைந்தன்.

அசத்துச் சொல்மாத்திரமுந் தோற்றல்மாத்திரமுமாதற்கு உதாரணங் கூறுகின்றது; அது கயிற்றரவு கானல் நீரென இவை.

அசத்தின் இரண்டுவகை உதாரணம் விளங்கவுரைக்கின்றது:—மலடிமைந்தன் தோற்றல்மாத்திரமென்பது எனைத்துணையுமின்றிச் சொல்மாத்திரமாகவே நிகழ்வது.

கயிற்றரவு சொன்மாத்திரமுந் தோற்றல்மாத்திரமுமாய் நிகழ்வது. இது முன்னர் மயக்கத்தான் அரவெனத் தோற்றித் தெளிந்தவழிக் கயிறாகவே நிகழ்வது. அது காரணமான கயிற்றைக்கண்டபின்னர்க் காரியமான அரவு தோன்றாது கயிறொன்றே காணப்படுவதென்பது கருத்து.

கானல்நீர் சொல்மாத்திரமுந்தோற்றல்மாத்திரமுமாய் நிகழினும் கயிற்றரவுபோல் காரணங்கண்டவழிக் காரியந்தோற்றாதிருப்பதன்று; நீர் தோற்றிக்கொண்டே யிருப்பதுபோல்வது. அங்ஙனம் தோற்றிய ஞான்றும் நீரென்பதெத்துணையுமின்றே.

மலடிமைந்தன் போன்றுதோற்ற மென்பதின்றிச் சொல்மாத்திரமாயிருப்பதூஉம், கயிற்றரவும் கானல்நீரும்போன்று சொல்மாத்திரமும் தோற்றல்மாத்திரமுமாயிருப்பதூஉம், கயிற்றரவு கயிற்றைக் கண்டவழி யரவுதோன்றாதிருப்பதூஉம், கானல்நீர் கானலையுணர்ந்த வழியும் நீர்தோற்றிக் கொண்டிருப்பதூஉமா மூவகையும் அசத்தின்பாற்படுமென்க.

படமென்பதற்குச் சொல்லும் தோற்றமும் பொருளுமென்னு மிம்மூன்றும் உண்மையின் சத்தெனப்படும். இதுநிற்க:

இனி உலகம் சத்தா? அசத்தா? என மேற்கூறிப்போந்த நியாய வாயிலாகக் காரிய காரணவாத வேதுவின் கடத்தைக்கொண்டு விவகரிப்பாம்.

காரியமென்பது: காரியத்தி னிலக்கணங் கூறுகின்றது. காரியமுன்னின்மைக்கு எதிர்மறை.

காரணமென்பது : காரணத்தி னிலங்கணங் கூறுகின்றது. காரணம் காரியத்திற்கு நியதமாய் முன்னிற்பது. நியதம் இன்றியமையாமை. காரணமெனினுங் கருவியெனினுமொக்கும். காரியத்திற்குப் பேதகாரண மிரண்டும் அபேதகாரண மொன்று முண்டெனத் துணியப்படும். கடமாகிய காரியத்திற்குத் தண்டு சக்கரந் துணைக்காரணமுங் குலான் நிமித்தகாரணமுமாகிப் பேதமும், மண்முதற்காரணமாகி அபேதமுமாகின்றன.

காரியம் வனைவதற்கு முன்னும் அழிவுபாட்டிற்குப் பின்னு மின்றென்பது துணிவேனும், வனையப்பட்டபின்னும் அழிவுபாட்டிற்கு முன்னுமுளதாதலான் இடைநின்றகாலத்தே காரியமானகடஞ்சத்தாமெனின், யாதுசத்தோ வஃது முன்னும் பின்னு நிகழ்வுமென்னு முக்காலத்து நிகழவேண்டும்; முன்னும் பின்னு மில்லாதது "இல்லது வாராது உள்ளது போகாது" என்னும் நியாயத்தான் இடைநின்ற காலத்து யாங்ஙனம்நிகழும்? இடைநின்றகாலத்து உளதேல் மண்ணாய் நிகழுங்கால் கடமின்று; மண்ணின்கண் வளைவு குவிவு முதலாய குணங்களெய்தியவழிக் கடமென்னும் பெயரெய்தும். வளைவு குவிவுமுதலிய குணங்களேயன்றிக் குணியன்றாம்; அக்குணங்களும் குணியான மண்ணின்கட்டோன்றி யதன்கண்ணே நிகழும்.

குணியென்ஞான்றுளதோ அஞ்ஞான்றே அதற்குக்குணமும் உண்டென்பதன்றே? வளைவு குவிவு முதலாய குணங்க ணிகழ்வதற்கு முன்னரும் உருட்சியல்லது வேறு குணம் நிகழ்ந்தன. மண்ணென்னுங்குணி தன்குணத்தொடுங்கூடிய வழியானே யம்மண்ணுக்குக் கடமென்னும் பொருட்பெயரெங்ஙனம் பொருந்தும்? மண்ணென்னுங்குணியும் அதன்கண் உளதாய வளைவு குவிவுமுதலாய குணங்களுமே யல்லது, கடமென்னும் சொற்குப் பொருள் வேறின்மையான் இடைநின்றகாலத்துங் கடமின்றென்பதுவே திண்ணம். இதனானே எஞ்ஞான்றுங் கடமென் றொருபொருளின்றென்றே பசுமரத்தாணிபோல் நாட்டப்பட்டதென்க.

அற்றேல், கடமென்னுந் தோற்றமும் அபாவமாகவேண்டுமன்றே? கடத்தோற்றங் காணப்படுவதனாற் கடமின் றென்றெவ்வாறு கருதப்படுமெனின், தோற்றம் பொருளாகுங்கால் கயிற்றினிகழும் அரவுமுளதாகல்வேண்டும். அரவு பொய்மையாகத்தோற்றினுங் கயிறென்றுணர்ந்தவழி யரவென்பது தோற்றக்கண்டாமில்லை; கடமங்ஙனமன்று. மண்ணல்லது எஞ்ஞான்றுங் கடமின்றென் றுணர்ந்தவழியும் பெயர்த்துந் தோற்றுகின்றதென்னை யெனின், நன்று வினாவினாய்; கூறுதும் :—தோற்றமென்ப இருதிறத்த: அவைகாரணத்தைக் கண்டவழிக்காரியந் தோன்றாதிருப்பதொன்று; அது கயிற்றரவுமுதலியனவென்க. காரணத்தைக்கண்டவழிக் காரியந்தோற்றுவதொன்று; அது கானல்நீர் முதலியனவென்க. கடத்தோற்றங் கானல்நீர் முதலினபோல்வதொன்றாகலின் காரணமானமண்ணே யாண்டுமுளதெனவும் காரியமான கடமில்லதெனவும் ஆய்ந்துணரினுங்கடத்தோற்றமிலதாகாமற் போந்திலது. அற்றாகலினன்றே இத்துணையுந் தோற்றம் பொருளன்றெனக் கூறவந்தாமன்றித் தோற்றமும் இன்றெனக் கூறினுமில்லை.

"இல்லது வாராது உள்ளதுபோகாது" என்னும் நியாயத்தாற் காரியமின்றெனினும் காரியம்நிகழாக்காலில்லையேயல்லதுநிகழ்ந்தாலுளதாகாதோவெனின், செய்பவன் காரணத்தைக் குணவேற்றுமை செய்வதன்றி யிலதாயபொருளை ஆக்கற்கிடனின்றென்க.

மண்ணானவனைந்த கடம் பெயர்த்துமண்ணாயவழி "உள்ளதுபோகாது" என்னு நியாயத்தாற் கடமிலதாகாமற் போத லமையாது. கடம்போலுந் தோற்றின தோற்றமிலதாய்ப்போயதன்றிக் கடமான பொருளிருந்தில்லா மற்போயதன்று. அற்றாகலின், 'இல்லது இல்லதே,' 'உள்ளது உள்ளதே;' இலதை யுளதாக்கவும், உளதை இலதாக்கவும் யாவரானு மாகலாிதென்க.

இனி "இல்லது வாராது" என்பதுண்மையேனும் இல்லாத கடம் உளதாதலில்லை; காரியமான கடம் வனைவதற்குமுன்னர்க்காரண வடிவாக நின்று,காரியப்படுங்கால் வெளிப்பட்டதெனின், காரியப்படுஞான்றும் மண் ணன்றிக் கடமென்னுஞ்சொற்குப் பொருளின்மையானும், காரணமான மண்ணினுங் கடமின்மையானும் கடமென்பதின்றேயென்றையமின்றிக் கூறத்தகுமன்றே? கடமுளதாயவழியன்று காரணத்தினிகழ்வதென்றுவது கூறத்தகும்? ஒருவர் மற்றொருவர்பாற் பேசாநின்று சிறிது ஞான்று வேறு காரியத்திலிருந்து பின்னரவனைக் கண்டவழிக் காணாமைநிகழின்,அவரில்லின் கணல்லது வேறிடத்திலிருப்பரென் றனுமானிக்க விடமுளதன்றே? அவனை ப்பேசியிராவழி, அவர்மேலையிடங்களி லிருப்பரென் றெங்ஙனமனுமானிக்கற் பாலது? அதுபோற் கடமுளதாகக் கண்டிருப்பேமெனின் கடமில்லாதவழி க்காரணமான மண்ணின்கண் அடங்கியிருக்கலாமென் றனுமானிக்கத்தகும். அங்ஙனம் எத்துணையு மின்மையான் கடமின்றென்றேகூறத்தகும். இத னானே கட மண்ணின்கணிருக்கவுமின்றென்றும், வெளிப்படவுமின்றென் றுங் கருதப்பட்டதென்க.

பொருள்க ளிரண்டுமோரிடத்தின்க ணிருப்பதாகாது. ஒன்று வேறொ ன்றினுக்கு மேலாகவேனுங் கீழாகவேனும் பக்கமாகவேனுமிருக்கவேண் டும். மண்ணுங்கடமுமுளவாயின் மண்ணினுக்குக் கடம் யாண்டையுள்ளது? யாண்டேனுமுளதாயின் மண்ணினுக்கு வேறாகவேயிருக்கவேண்டும்; அங் ஙனமின்றாம். ஒன்றில் வேறொன்று நிகழ்வது ஒன்றுண்மையு மொன்று தோற்றல்மாத்திரமுமாயினமையும்; பழுதையின்கண் பாம்பும், கானலின் கணீரும்போல். அற்றேல் அற்றாக; இங்ஙனமே மண்ணின்கண் கடம் தோற் றமே யன்றிப் பொருளின்றென்றுணர்க.

மண்ணின்கண் வளைவு குவிவு முதலிய குணங்களுளவேயெனின் அன் னவையுந் தோற்றமேயாம். அற்றன்றி ஒரு மண்ணேனும் வளையவுங் குவி யவுங் காணப்பட்டதேயன்று. மண்ணனைத்து மொருங்குசேர்ந்து வளைதல் குவிதன் முதலிய தருமங்களை யெய்தியவெனின், எல்லாமொருங்கு சேர்ந் துண்டாய தருமம் ஒரோவொன்றினுக்குஞ் சிறிதுசிறிதாகவேனுங் காணப் படவேண்டுமன்றே? அவ்வாறின்மையான் மேற்கூறிய தருமங்களையும் பெற் றதேயின்றென்பது துணியப்படுமென்க.

இதுகாறுங் கூறிப்போந்த நியாயங்களான் காரணமொன்றே முக்காலத் தினு முளதென்பதூஉம், காரியமங்ஙனமில்லதென்பதூஉம், அஃதுஞ்சொ ன்மாத்திரமுந் தோற்றன்மாத்திரமுமாமென்பதூஉங் கூறினும். இதனானே மண் யாண்டுமுளதென்றும், கடம் யாண்டுமிலதென்றுந் துணியப்பட்டன வென்க.

ஒரு பொருளுளதாகவேண்டின் முன்னரில்லாதிருந்தே நிகழவேண்டும். இல்லாதிருந்தது இறந்தகாலத்ததாம்; உளதாவது நிகழ்காலத்ததாம்;இறப்பும் நிகழ்வு மொன்றெனப்படா. அங்ஙன மாகாதவழி இன்மையாய காலமும்

உண்மையாய காலமும் வேறாமன்றே? ஒரோஞான்று இன்மையும் உண்மையு மாதலியையா. கடத்தோற்ற முளதாமிடத்துக் கடமிருந்து தோன்றிற்றா இல்லாது நிகழ்ந்ததா? என்றாசங்கை நிகழும். ஆண்டை நிகழ்ந்தவழி யிருந்தே நிகழ்ந்ததெனின் இருந்தது தோன்றுவதற்கிடனின்றே; இல்லா ததே தோன்றிற்றெனின் இன்மையும் உண்மையுங் காலவேறுபாடெய்தலின் நிகழ்வின்கணின்மையு முண்மையுங் கூடா. இப்பெற்றியாற் பொரு டோன்றற்கிடனின்று. ஒருபொருளழிவுபாடெய்த வேண்டின் உள்ள தொருபோதும் அழிவுபாடொருபோதுமாதலியையும். அழியுஞான்று இரு ததழிந்ததா? இல்லாததழிந்ததா? என்ற இக்கடாவினுக் கிருந்ததழிந் தென்றே விடை கூறவேண்டும். இருப்பதாய வுண்மையும் அழிவதாய வின் மையும் ஒரோ ஞான்றியையா. இதனானே உள்பொருள் அழிதற்கிடனின்று "இல்லது வாராது உள்ளது போகாது" என்னும் நியாயமே ஈண்டைச்சாலும்

காரியமான கடம் அசத்தேனும் காரணமாய மண்ணேனுஞ் சத்தென் பாமேயெனின் கூறுதும்: எது காரணமெனப்படுமோ அது காரியப்படவே வேண்டும். ஆடைக்கு நூல் காரணமேனும் பஞ்சினுக்கந்நூல் காரியமா கும். அங்ஙனமே கடத்துக்கு மண் காரணமேனும் அம்மண்ணும் தன்காரண மாயஅணுக்களுக்குக் காரியமாம். காரியமென்பதனைத்து மெக்காலத்து மின் றென்றிதுகாறுங் கூறிப்போந்தாமாகலின் அம்மண்ணும் அசத்தெனப் படு மென்க.

காரியமாகவேனுங் காரணமாகவேனு முள்ளதியாதோ அஃதே யுண் மையாயுள்ளது, அஃதேசத்தெனின் காரியமாகவேனுங் காரணமாகவேனு மிருந்ததியாதோ அஃது காரியமாகவேனுங் காரணமாகவேனுமிருக்கவேண் டும். காரியமெனின் முக்காலத்து மின்றென்று துணியப்பட்டதென்க. யாது காரணமெனப்படுமோ வஃதுகாரணமாகவே யிராது வேறொன்றனுக் குக் காரியப்பட்டு அசத்தென்னும் பெயரெய்துகின்றது. காரியகாரணஞ் சங்கிலித்தொடர்பேபோன்று முடிவின்றி நிற்குமெனின் அஃதுங் காரியகார ணத்தினடங்கி அசத்தெனப்படுமென்க.

பரமாணு அழிவின்றி யெஞ்ஞான்றுநின்று காரியப்பட்டு மீண்டுமழிந்து காரணமாகவே யிருக்கும், அஃது காரியப்படுவதின்று; எஞ்ஞான்றுங் காரண மாகவே யிருப்பதொன்றாமாகலின்எனின், அனைத்துங்காரியப்பட்டு அஃதொ ன்றுங் காரியப்படாதெனக்கோடற்கு எனைத்துமே நியாயம்புலப்படுவதன்று அஃதேகாரணமாமெனின் ஓர் பரமாணுவினோடு வேறோர் பரமாணு விரவி, அஃது வேறோர் பரமாணுவினோடு விரவி, இங்ஙனமேகாரியப்பட்டு மகத்தாக வேண்டும். முன்னர் ஓரணுவினோடு வேறோர்அணு விரவுமாயின் ஓர்பால் விரவி, ஏனைய மூன்றுபாலும் விரவாதிருக்கவேண்டும். திருஷ்டாந்தமாக ஓரெலுமிச்சங்கனியோடு வேறோர்கனி விரவுமாயின் ஓர் பால்விரவியேனைய விரவாதிருக்கக் கண்கூடாகக் கண்டாமன்றே? இவ்வாறே யோர்பொருளோடு வேறொன்று விரவுங்கால் ஓர் பால் விரவி யேனைய பால் விரவா. விரவிய வழி விரவாதனவு நிகழ்தலின் முன்பின்நடுமுதலியன நிகழ்வது ஒருதலையா மென்க. எது உறுப்பினிகழ்வதோ அஃது காரணமாகாமே காரியமேயாம். காரணமாக நிகழ்ந்தன எனைத்துங் காரியமாக, இஃதொன்றுங் காரியப்படா தென்பது உத்திக் கொத்ததன்று. யாது எவ்வாறு நிகழினுங்காரணமொன் றுளதாக வேண்டுமெனின் அஃதேன்காரியப்படாது? உலகத் தோற்றமுந்

குக் காரணம் வேண்டற்பாற்றெனின், ஆண்டைக்காரணமாய அணு நிலைபே றுடைத்தாயினன்றே ஈண்டையுலகமென்பது சத்தாம்? காரியகாரணமுடிவின் றிச் சேறலின் அனவத்தாதோடமெய்தும்; ஆகலின் முடிவின்கண் எத்துணை யணுவுமிருப்பதாகக் கூறல் எவ்வாற்றானு மியையாதென்க.

கண்ணுக்கும் மனத்துக்கும் விடயமான அணு அசத்தாய்க்கழினுங் கண் ணுக்கும்மனத்துக்கும்எட்டாஅதிநுட்பஅணு உண்மையாயுளதேல் அஃதுகண் கூடாமா? அனுமான அளவையானறிதற்பாற்றோ? காண்டலளவையானறிவ தன்று, அனுமானவளவை யானறிதற்பாற்றெனின், கண்கூடான சத்தைக் கொண்டு கண்கூடன்மையான சத்தையறிவது அனுமானத்துக் கிலக்கண மாம். இவ்விலக்கணத்தான் புகை சத்து, நெருப்பு சத்து; புகை கண்கூடு, நெருப்பு அங்ஙனமல்லாதது. கண் கூடான புகையானங்ஙனமல்லாத நெரு ப்பை யுணர்வது தக்கதிருட்டாந்தமாம். இதுபோன்று தாட்டாந்தத்துக் கொவ்வாது. கண்ணுக்கும் மனத்துக்கும் விடயமான அணு அசத்தெனத் துணியப்பட்டது; கண்ணுக்கும் மனத்துக்கு மெட்டாத அணு சத்தெனச் சொல்லப்படுகின்றது. கண்கூடாம்புகை சத்தாயிருப்பதுபோன்று தாட் டாந்தத்தும் கண்ணுக்கும் மனத்துக்கும்விடயமான அணு சத்தாகவேயிருக்க வேண்டும். அங்ஙனமன்றி அசத்தாய்ப் போந்தமையின் திருட்டாந்தாபாச மாகின்றது. கண்ணுக்கும் மனத்துக்கும் விடயமான அணு சத்தாயிருப்பதா யின் கண்கூடானஇச்சத்தைக்கொண்டு அங்ஙனம்அன்மையானகண்ணுக்கும் மனத்துக்குமெட்டாத அணு சத்தாயிருப்ப தென்றனுமானிக்கலாம். புகை யானது ஆராய்ந்துழிப் பனியாய்ப் போந்த விடத்துப் புகை அசத்தாய்ப் போமன்றோ? அற்றேல் நெருப்பு எங்ஙனஞ் சத்தாம்? அனுமானம் தோற்றம் எதார்த்தமென்றிருதிறத்த. இவற்றுள் தோற்ற அனுமானத்தால் பொருள் சித்தித்திலது; எதார்த்த அனுமானத்தால் பொருள் சித்திக்கும். புகை எதார்த்த அனுமானம்; புகையைப்போல் தோற்றி ஆராய்ச்சியின்கண் அஃ தின்றி நின்றபனி தோற்றவனுமானமாம். எதார்த்த அனுமானப்புகையால் நெருப்புச்சித்திக்குமன்றித் தோற்றஅனுமானப்பனியாற் சித்தித்தற்பாலதா? அங்ஙனமே கண்ணுக்கும் மனத்துக்கும்விடயப்படும் அசத்தானதோற்றஅனு மானத்தால் கண்ணுக்கும் மனத்துக்கு மெட்டாதஅணு சித்தித்தற்பாலதன்று.

உலகினின்றும் பற்பலபொருள்கள் காரியப்பட்டுப் பின்னைக் காரணமா வதைக் கண்டிருக்கின்றோமன்றி, யுலகங் காரியப்படுவதை நாமேனும் நம்முன் னோரேனுங் கண்டதுமின்று; கேட்டதுமின்று. காண்டலுடலானன்றியா காது; கேட்டது ஏனையோர் கூறக் கேட்கவேண்டுவது; கூறல் காண்டலின்றி யெங்ஙனமியையும்? காண்டல் உடலினோடுங்கூடியே நிகழற்பாலதாம்; உட ல் உலகன்றியின்றாம். உலகத்தின் இன்மை யுடலன்றிப் பிறிதொன்றிருந்து கண்டாரைக் காண்கின்றிலேம். அற்றாகலின் உலகமென்றுமொன்று முள்ளது; காரியமன்று, காரணமேயெனின் கூறுதும்:—

எவ்வெப்பொருளினையுமாராயின் ஒன்றன்கூட்டம், பலவினீட்டமென் றிருதிறத்த. ஒன்றன்கூட்டம் பலவினீட்டமென்பவற்றின்பாற்படுவனவன்றி யெப்பொருளும் யாண்டுமுளவாகா. திருட்டாந்தமாகக் கடமொன்றன் கூட்டமா? பலவினீட்டமா? எனின் ஒன்றன் கூட்டமேயாம். ஒன்றன் கூட்டமாய மண்ணையன்றி முக்காலத்தினுங் கடமென்பதொன்றின்றாம்; அம்மண்ணுமொன்றன்கூட்டமான அணுவினையன்றி யாகா. பலவினீட்

டும் இவ்வாறேகாண்க. இங்ஙனமே ஒவ்வொரு பொருளினையும் ஆராயுங்கால் இன்றாகவேமுடியும், உலக மிங்ஙனமாய ஆராய்ச்சியான் இன்றெனப்படும். ஒன்றன்கூட்டம், பலவினீட்டமென்பன காரணமாகக்கூடி நின்று வேறாகத்தோற்று மவசரத்தினைக் காரியமெனப்படும். முன்னரோ யணுவினைப் பூருவபக்கப்படுத்தினும்; ஆண்டையுணர்க.

உலகங்காரியப்படுவதைக் கண்டாருங்கேட்டாருமின்றாகலின், எஞ்ஞான்றும் நித்தியமேல்,உலகஞ் சத்தாய்எஞ்ஞான்றும் நித்தியமா? அசத்தாய் எஞ்ஞான்றும் நித்தியமா? சத்தாய் எஞ்ஞான்றும் நித்தியமேல் சத்தென்றுரைப்பது எவ்வாற்றானும் இயைந்திலது. அசத்தாய்நின்று நித்தியமேல் இல்லாதது நித்தியமென்றுரைத்தலா லென்பயன்? இல்லாத முயற்கொம்பினையும் நித்தியமென்றுரைப்பதற்கு ஒக்குமன்றா? உலகம் எக்காலத்துமின்றாகலின் உலகத்தினைக் காரியமென்றேனுங் காரணமென்றேனுங் கூறுதலெத்துணையும் இயையாதென்க.

இதுகாறுங் கூறிப்போந்ததனான் உலகம் அசத்தாய்க் கழியினுங் கண்கூடாக இன்பத்துன்பங்களைத் துய்க்கின்றாமே;யாங்ஙனம்உலகைஅசத்தென்றுரைப்பதெனிற் கூறுதும்:—இன்பதுன்பங்களைத் துய்ப்பார்யார்? நாமே. நாம் யார்? மானிடர். மானிடர்காரியமா? காரணமா? காரியம். காரியம் பொய்யென்பதனை முன்னரோ விளக்கினும். காரணமான உறுப்போ, அவைதாம், தமது காரணமாய ஊன், குருதி, என்பு முதலியவற்றை நோக்கக் காரியப்பட்டுப் பொய்யேயாம். இவ்வாறே ஒரோவொன்றும் பொய்யாமிடத்து இன்பதுன்பங்களும் அவற்றினைத் துய்க்கும் அனுபவங்களும் பொய்யாகப்போதலாகும். இஃதென்னை? வாயடி கையடியாயிருக்கின்றதன்றி ஐயநிகழ்ச்சி யொழிந்ததன்றெனின், சொப்பனமுழுவதூஉம் பொய்யாமன்றே? சொப்பனத்திற் கண்கூடாகக் கண்டிருக்கும் இன்ப துன்பங்களும் அவற்றினுக்கு முதலாயுள்ள சொப்பனவுலகமும் பொய்யெனபதனைத் துணிந்ததின்றா? அவ்வாறேயிவ்வுலகினையும் இன்பதுன்பங்களையும் என் பொய்யென்றியம்பற்பாற்றன்று?

ஒருபொருளினை யறியவேண்டுவான் அப்பொருட்கு வேறாய்நின்றே யறியவேண்டும். வீட்டினை யறியவேண்டுவான் வீட்டிற்கு வேறாய்நின்றே யறியவேண்டும். இவ்வாறே யெவற்றினையும் உணர்கின்றாம். அற்றேல்,உலகத்தை யறியவேண்டுவான் உலகினுக்கு வேறாய்நின்றே யறியவேண்டும். அவ்வாறு கண்டுரைத்தா ரொருவருமிலர். காண்பவர் சமட்டியான உலக அமிச வியட்டிசரீரத்தைக்கொண்டு உணர்கின்றமையான் அது வேறுபட்டு உணர்ந்ததாக யாங்ஙனம் கூறற்கிடனாகும்? அசத்தியமான சொப்பன சகத்தின்கண் அச்சகத்தின் அமிச அசத்திய சரீரங்கொண்டு அச்சகத்தை ஆண்டுக் காணுந்துணையும் அது சத்தியமாகவே நிகழினும், அச்சகத்தினையும் அச்சகத்தின்அமிச சரீரத்தினையும் விட்டு வேறாயிருக்கும் இஞ்ஞான்று தோன்றாது பொய்யாகப் போந்ததின்றா? சொப்பனாவத்தையின்கண் சொப்பன சகத்தைச் சத்தியமாகக் காணினும் காணுமஞ்ஞான்றும் அச்சொப்பனசகம் யாங்ஙனமித்தையோ, அங்ஙனமே இச்சகத்தினையும்இச்சகத்தின் அமிசமான சரீரத்தைக்கொண்டு காணுந்துணையும்சத்தியமாகத்தோற்றினும் அங்ஙனமே இச்சகமும் மித்தையென்றுரைப்பது எனடாது? இதனானே ஒருபொருளினையறியவேண்டின் அறிபவன் வேறாயிருந்தே யுணரவேண்டுமென்றும்,

அங்ஙனமின்றி யதுவாயிருந்துணர்தல் பொய்யுமெய்யுமாகத் தோற்றுமென்றுங் கூறியவாறாயிற்று.

ஒரு பொருளினை யுளதுஇலதென்றாயுங்கால் அப்பொருளின் ஓர்பால் மற்றோர் பாலினோடுஉற்றறிதலானேயுளதெனக்கோட லெவ்வாற்றானுமமையாது. அங்ஙனங்கொள்ளுங்கால் கானல்நீரின்அலை மற்றோரலையோடு பொருந்துவதனானே அக்கானல் நீரும் உண்டெனக் கொள்ளவரும். இங்ஙனமே யுலகத்தின் ஓர்பகுதி மற்றோர் பகுதியினோடு பொருந்துமாற்றானே யறிஞர் உலகைச் சத்தென்று ஓதாரென்க.

இவையனைத்தும் நியாயமேனுங் கண்கூடாகக்கடத்தைவனைந்த நிமித்தகாரணனான குலாலனையும், துணைக்காரணமாய தண்டு சக்கரங்களையும் எவ்வாற்றான் அசத்தியமாகக் கூறற்பாற்றெனின், குலாலனையுந் தண்டுசக்கரங்களையுங் காரியகாரண பக்கமாய் ஆராயுமிடத்துப் பொய்யாக முடிகின்றதன்றோ? சொப்பனத்தின்கண் குலாலன் தண்டுசக்கரங்களைக்கொண்டு கடமுதலானவற்றை வனையக்காணினுங் குலாலனுந் தண்டுசக்கரங்களும் அவற்றினுக்கு உபாதானகாரணமான சகமும் யாங்ஙனம் பொய்யாமோ, அங்ஙனமே யிஞ்ஞான்றும் பொய்யென்னுமை யாதுபற்றியென்க. இதனானே யுலகமென்பது அசத்தென்றே துணிதற்பாற்றென்க.

இன்னுமிதுபோன்றபிறவாதங்களும் சிதம்பரத்திற்பிரசுரிக்கும்"ப்ரம்ம வித்தியா"வென்னும் பத்திரிகையிற்காண்க.

(1886ஹ ஆகஸ்டு மீ 23உ சுதேசமித்திரன், 30உ ப்ரம்மவித்யா.) இந்து.

---

ப்ரம்மவித்தியா பத்திராதிப ரவர்கள் சமுகத்திற்கு,

ஐயா,—சென்ற செப்டம்பர் மீ 26உ தத்துவவிவேசினியின்கண் "ஹிதோபதேசியார்" வரைந்திருக்கும் விஷயத்தை யிம்முறை தங்கள்பத்திரிகையில் பிரசுரம் செய்யவேண்டும். மறுபத்திரிகைக்கு அதன்மறுப்பு வரைந்தனுப்புவாம்.

இந்து.

---

## கடிதக்குறிப்பு.

இந்து:—தாமெழுதியபடி தத்துவவிவேசினியில் "ஹிதோபதேசியார்" வரைந்திருக்கும் விஷயத்தை இம்முறை பிரசுரித்திருக்கிறோம்.

---

## உலகம் அசத்தா? சத்தா?

---

இந்தச் சங்கையைப்பற்றி யாலோசிக்குமிடத்து, உலகத்தினது இலக்கணம் இன்னதென்றும், சத்தினிலக்கணம் இன்னதென்றும், அசத்தினிலக்கணம் இன்னதென்றும் முன்னம் வரையறுத்துப் பின் அவ்வுலகம் சத்தின்பாற்படத் தக்கதோ அல்லது அசத்தின்பாற்படத்தக்கதோவெனத் தருக்கித்துப் பாற்படுத்தல் வேண்டும். இங்ஙனஞ்செய்யாமல் சத்து அசத்துகளை மாத்திரம் தமக்குத்தோன்றியமட்டும் ஒருவாறு வரையறுத்துவிட்டு, வரையறப்படுத்தாத உலகத்தைச் சத்தென்றாவது அசத்தென்றாவது நிர்மாணித்தலைக்காட்டினும் அந்தகநியாயம் வேறொன்றுளதோ? நிலக்கரி உலோகமா? கல்லா? வென ஆசங்கை நிகழுழி, நிலக்கரி இன்னதென்றும், உலோ

கம் இன்னதென்றும், கல் இன்னதென்றும் இலக்ஷண சித்தப்பட்டாலன்று இதன் இலக்கணம் இதனோடு பொருத்தம். ஆதலால் அனுதருமசம்பந்த வாற்றலால் இது இதுவேயாம், அதுவாகாது என்று துணிதல்கூடும்.

1886ளு ஆகஸ்டுமீ 23உ மித்திரனில் வெளியாகிய "இந்து"வைப்போலாது, நாம் உலகம் இன்னதென்றும், சத்து இன்னதென்றும், அசத்து இன்னதென்றும் முன்னம் வரையறுத்து, பின் உலகம் சத்தென்றும் அசத்தென்றும் நிர்மானிப்பாம்.

உலகம், அல்லது வஸ்து, அல்லது பூதியம் என்பது தனக்கென ஓர் சொரூபமின்றி,முக்காலத்துநிகழு மெல்லாச்சொரூபங்களுந் தாமாய்க் குருத்துவம், இயக்கம், ஆகருஷிணம், திரிவு முதலியவற்றை அபின்னமாயாண்டு முடைய உண்மைப்பொருள்; இதுவே சத்தென்றும் சொல்லப்படும்.

இந்தச் சத்தினுடைய அபாவமே அசத்தாதலாலும்,அசத்து யாண்டுமில தாதலாலும் இல்பொருளுக்கு இலக்கணமுமின்றென்க.

ஆதலால் உலகம் சத்தின்பாற்படுமேயல்லாது சத்திற்குச் சர்வவிரோதமாகிய அசத்தின்பாற்படாது.

ஆனால் மேற்சொன்னபத்திரிகையில் உலகம் அசத்து என்று காட்டிய ஸ்ரீமான் "இந்து"வின் நியாயம் போலியோவெனின் முக்காலும் போலியே. அதை ஈண்டுக்காட்டுவாம்.

இவ்விந்து "சத்துயாண்டு முள்ளது" என்று கூறினரே யல்லது அது இதுவென்று காட்டினரில்லை. சத்துக்கு உதாரணமாகப் படத்தைக் கூறினரோவெனின், படம் யாண்டு முள்ளதா ? படம் காரணமா? காரியமா ? காரியமெனின்,இவர்கூறிய கடநாஸ்தி நியாயமே இவருக்கு விரோதமாகின்றது. படத்தை வியவகாரிகமாய்க் கூறியதேயல்லாமல் பாரமார்த்திகத்திற்கு அன்று எனின், யாண்டுமுள்ளது பாரமார்த்திக சத்தா ? வியவகாரிகசத்தா? பாரமார்த்திகசத்தெனின்,இலக்கணங்கூறியது ஒன்றற்கும் எடுத்துக்காட்டியது ஒன்றுமாகின்றமையால் பாம்புகடிக்குத் தேள்விஷந்தீருமருந்தளித்தது போலன்றோ இருக்கின்றது. 'அசத்து யாண்டுமிலது' என்று கூறி, பின்னர்க் காட்சியைக் காணப்படுபொருளாகவும், சொல்லைப்பொருளாகவும், காட்சி,சொல், ஆகிய இவ்விரண்டையும் பொருளாகவும் மயங்கி உதாரணங் கூறியுள்ளார். இலக்ஷணமெல்லாம் அவற்றை யேற்றுள்ள இலக்ஷியப்பொருளுக்கே யல்லாமல், இல் பொருளுக்கன்றே. இல்பொருளுக்கு உதாரணம் பகர்ந்தது என்னபயனைக்கருதியோ ? மேலும் இவ்வாதி உற்பத்திக்கும் உருமாற்றத்திற்கும் பேதமுணராமல் மயங்கி வாதாடுகின்றார். உற்பத்தியாவது முதற்காரணமில்லாமல் உண்டாவது. உற்பத்தியை வைதிகிகள் சிருஷ்டியென்றுங் கூறுவர். "இல்லதுவாராது" என்ற நியாயம் இதற்கே பொருந்துமாதலால், இதற்கு உதாரணமும் கிடையாது. உருத்திரிதலாவது ஓர் உரு மற்றொருருவாய்த்திரிதல். இதற்கு உதாரணம் கடமே. கடமென்பது ஓர்வகை உருவிற்குத் தமிழ்நாட்டார் சொற்சுருக்கமாய் வைத்துக்கொண்ட கற்பிதப்பெயரேயல்லது வேறல்ல. இந்தக்கடம் மண்ணாயிருந்தாலும் கடம்தான், பொன்னாயிருந்தாலும் கடம் தான், செம்பாயிருந்தாலும் கடம்

தான், பித்தளையாயிருந்தாலும் கடம்தான். கடஉருவம் மாறினும் வஸ்துவாகிய மண், பொன், செம்பு, பித்தளை இவைகள் மாறவும் மாறா; அழியவும் அழியா. ஆதலால்தான் 'உள்ளது போகாது' என்னும் நியாயமும் இதற்கே பொருந்தும்.

இன்னும் இவர்கூறிய சத்து அசத்துக்களின் லக்ஷணவியாப்திதோஷங்களைப்பற்றி விசாரிப்பாம். சத்துக்கு அசத்து சர்வவிரோதமாயின், இவர் சொன்ன இலக்கணங்களில் வியாப்தி தோஷமின்று. சர்வவிரோதமல்லாக்கால், வியாப்திதோஷம் கூறுதேயமையும். ஆதலால் அவ்விலக்கணங்கள் சர்வவிரோதமா அல்லது வேறுவிரோதமா வென்பதனைநியாயசாத்திரப் பிரமாணத்தால் விளக்கிக்காட்டுவாம்:—

விரோதம் சர்வவிரோதமென்றும், சம்பவவிரோதமென்றும், பாரிசேடவிரோதமென்றும், சகளவிரோதமென்றும் நான்குவகைப்படும். இவற்றுள்,

| | |
|---|---|
| 1. சர்வவிரோதம் | யாண்டுமுள்ளது சத்து<br>ஓர்போதும் இல்லது அசத்து |
| 2. சம்பவவிரோதம் | யாண்டுமுள்ளது சத்து<br>சிலபோதுள்ளது சத்து |
| 3. பாரிசேடவிரோதம். | யாண்டுமுள்ளது சத்து<br>யாண்டுமில்லது அசத்து |
| 4. சகளவிரோதம் | சிலபோதுள்ளதுசத்து<br>சிலபோதில்லது அசத்து |

மேலே இவர்கூறிய இலக்கணப்படி சத்துக்கும் அசத்துக்கும் உள்ளவிரோதம் சிறப்பாந்தன்மையினதாகிய சர்வவிரோதத்து ளடங்காமல், சிறப்பின்மையாகிய பாரிசேடவிரோதத்து ளடங்குகின்றமையால், அசத்திற்குக்கூறிய போலி இலக்கணத்தில் வியாப்திதோஷமுண்டாகின்றது. இவ்வியாப்திதோஷத்தை நையாயித்துக்காட்டுவாம்.

எது அசத்தோ அதுயாண்டுமில்லது.
கடம் அசத்து என்றதனால்
கடம் யாண்டுமில்லது.

வனைந்ததற்குப்பின்னும் அழிவுபாட்டிற்கு முன்னும் கடமுண்டாதலால் கடம் யாண்டுமில்லதாய் எங்ஙனமாகும்? கடம் யாண்டுமில்லதல்லாதபோது அசத்தெப்படியாகும்?கடம் யாண்டுமுள்ளதுமல்ல வாதலால்சத்தும் அன்று. இவர்கூறிய இலக்கணப்படி கடம் சத்தும் ஆகாமல் அசத்தும் ஆகாமல் சங்கரசங்கேத நிலையில் நிற்கின்றது; ஆதலால் இவர்கூறிய அசத்திலக்கணத்தோடு இவரது உதாரணமே முரண்படுகின்றது. உலகத்திலே நையாயிகரெல்லாரும் ஒன்றைக்காரணமென்றும், மற்றொன்றைக் காரியமென்றுங் குறிப்பது சொரூபத்தையேநோக்கியேயல்லாமல் வஸ்துவை நோக்கியல்ல. வஸ்துவோ காரணத்திற்கும் காரியத்திற்கும் நியதமாயிருப்பது. மனோபாவனையால் காரணத்தைநோக்குழிக்காரியமும், காரியத்தை நோக்குழிக்காரணமும் இன்மையாய்க்காணப்படினும் இவ்விரண்டிற்கும் நியதமாயுள்ளது எதுவோ, அது எக்காலத்தும் உள்ளதே; அதுவே சத்தென்பதும், வஸ்துவென்பதும், உலகமெ

ன்பதுமாதலால், உலகு அசத்தாதல் ஒருக்காலுமில்லை. இதனைச்சிந்தித்து இந்துவென்னப்பட்ட நமது நண்பர் பின்மறுமொழி பகர்வாராக.

(1886-ஆ செப்டெம்பர்மீ 26உ தத்துவவிவேசினி)

ஹிதோபதேசி.

---

## விடைகூறல்.

---

"உலகம் சத்தா? அசத்தா? என்பது." இவ்விடயத்தினைச் சுட்டி முன்னர் சுதேசமித்திரனினும், பின்னர் பிரமவித்தையினும் வரைந்திருந்தாம். அதனை "ஹிதோபதேசியார்" என்னும் நமது நண்பரொருவர் "தத்துவவிவேசினி" என்னும் பத்திரிகையின்கண் தமக்குத்தோன்றியாங்கு பொறித்து விளக்கினர். அதனை 1886-ஆ அக்டோபர் மீ 30-உ பிரசுரமான பிரமவித்தையின்கண்ணும் காண்க. இனியெமக்குப் போந்தவாறு நிறுத்துவான் பின் வருமாறு வரைகின்றாம்:—

உலகம் சத்தா? அசத்தா? என்புழி யீண்டையுலகவிலக்கணமெனைத்துணையும் கூறகில்லாது ஏனையவிரண்டற்கு மிலக்கணமுணர்த்திய தெம்மாட்டுக் குற்றமென்றுணர்த்திய பின்னர், அவ்விலக்கணமுணர்த்திய தொடங்கும் தாமேனும் அம்மூன்றனுக்கு நன்குணர்த்தினரா? இன்றே. இவர் உலகினிலக்கணமே சத்துக்கு மென்பதன்றி உலகவிலக்கணமும், குருத்துவமுதலிய சில குணங்களையுடைய உண்மைப் பொருளே யென்றனர். அவ்விலக்கணத்தின்பா லுண்மைப் பொருளெனச் சேர்த்தற்குக் காரணம் யாதோ அறிந்திலமென்க. இவ்வாறு இலக்கணங் கூறிப்போந்து அதனையே சத்தெனக்கொண்டு, இதனானே தாமிம் மூன்றனுக்கு மிலக்கண முணர்த்தியதூஉம் சாலவியக்கற்பாற்றேயாம்.

உலகம், சத்து என்னு மிரண்டனுள் ஒன்றனுக் கிலக்கணமுணர்த்தி மற்றொன்றனை யிவருங் கூறாதொழிந்தனர்; யாமுமவ்வாறே கூறாதொழிந்தாம். இதனானே நம்பால் யாது குறைவு? இன்னோர்க்கஃதேனின்று? இவர் உலகமே சத்து, சத்தேயுலக மென்றனன்றோ வுணர்த்தினரெனின் அஃதூஉமியைபுடைத்தன்றென்க. அஃதங்ஙனமேல் இவ்வாசங்கை யாங்ஙனநிகழும்? கடம், கலசமா? படமா? என்றோராசங்கை யுளதே லஃதியையும். இவர் எடுத்துக்காட்டிய நிலக்கரி உலோகமா? கல்லா? என்னு மாசங்கையின்கண் நிலக்கரி யென்பதூஉம், உலோகமென்பதூஉம் பரியாயபதமன்றே! இவற்றுள் ஒன்று சாமானியமும், மற்றொன்று விசேடமுமா மென்க. ஈண்டங்ஙனமின்றி யிரண்டுமொரோவொருபொருள் கருதியதெனக்கூறி, மீண்டுங் கூறியது கூற லென்னுங் குற்றத்திற் கிடனாகி யாங்ஙனந் தப்புவர்?

உலகமென்னுஞ் சொற்பொருளை நன்காராய்ந்துழி அஃது காணப்படுவதென்னும் பொருட்டதாகலின் காணப்படுவதென்பதற் குலகமென்பதியையும். இன்னோர் நையாயிகநூல் வல்லுனர்போன்று வரைந்தனரேயல்லது சத்தநூல் வல்லார்போன்றல்லர். இஃதியாங்ஙனமெனின் காட்டுதும்:—

உலகமென்னுஞ் சொல் (லோக்) காண்டலெனப் பொருள்படும் வடமொழிப்பகுதியென்றுய்த்துணர்வரேல் உலகமென்ப துண்மைப்பொருளென் றெவ்வாற்றானுங் கூறத் துணியார். இனி உலகமெனினும் திருசியமெனினு மொக்கும். உலகமென்னும் பதார்த்த வியல்பினை நன்குணர்ந்து கொள்ளு நிலையினன்றே யிவ்வாசங்கை யெழும்? அதனானே யிவ்வாசங்கையின் விடயமான விரண்டு தன்மைகளையும் உணர்த்துவான் வேண்டியதேயின்றியமையாமை யுடைத்தென்பது கருதி, யிவ்விரண்டினுக்கே யிலக்கணம்பரக்கக் காட்டினும். சத்து, அசத்தென்னு மிவ்விரு சொற்களுக்கும் பொருள், உள் பொருளினையும் இல் பொருளினையுமே யுணர்த்தினமையே சாலுமென்பதனை வடநூல் வல்லார்வாய்க் கேட்டுணர்க. அங்ஙன முணரமாட்டாமையானே கடமென்னும்பெயர் தமிழ்நாட்டாரிட்டு வழங்குவதெனக்கூறியுள்ளார்.

“உலகம்,அல்லது வஸ்து, அல்லது பூதியம் என்பது தனக்கெனவோர் சொரூபமின்றி முக்காலத்து நிகழு மெல்லாச்சொரூபங்களுந் தாமாய்க்குருத்துவம், இயக்கம், ஆகருஷணம், திரிவு முதலியவற்றை யபின்னமா யாண்டுமுடைய வுண்மைப்பொருள்; இதுவே சத்தென்றுஞ் சொல்லப்படும்.” எனக்கூறினர். உலகம் அல்லது வஸ்து அல்லது பூதியம் என்பது தனக்கென்றோர் சொரூபமிலதென்று கூறிப்போந்த இவரே,பின்னும் எல்லாச்சொரூபங்களுந் தாமாயெனமுரணிக் குருத்துவம், இயக்கம், ஆகருஷணம், திரிவு முதலியவற்றை யபின்னமாகவுடைய வுண்மைப்பொருளென்றனர். உண்மைப்பொருளிஃதெண வெள்ளிடை மலைபோல விளக்காது குருத்துவமுதலனவற்றைவாளா கூறியதனாற் போந்த பயனென்னை? இதுவே சத்தென்றும்சொல்லப்படு மென்பதனுள் இதுவென்னுஞ் சுட்டெதன்மேற்று? அச்சுட்டினை யேற்கும் பொருளின்னதெனக் குறிப்பதற் கெனைத்துணையும் வகையின்றே! இதற் கியாதுகூறுவதெனக் கடாவியொழிக. “இந்தச் சத்தினுடைய அபாவமே அசத்தாதலாலும், அசத்து யாண்டுமிலதாதலாலும், இல்பொருளுக்கிலக்கணமு மின்றென்க” என்றனர். சத்து இனைத்தென் றுணர்த்தாமே சத்தினபாவம் அசத்தென்றதூஉம், அசத்து யாண்டுமிலதென்றதூஉம், இல்பொருளிற் கிணக்கண மின்றென்றதூம் பயனில் கூற்றேயா மென்றொழிக. இது நிற்க;

இலக்கணக்குற்றஞ் சிலவெடுத்துக் கூறுவான்றொடங்கி இல்பொருளுக்கியையுமா வெனக்கூறினர். அற்றேல் தாங் கற்ற தருக்கநூலில் அபாவ நான்குமெற்றுக்கு மறந்தனரோ! அஃதுணர்கின்றிலம். அற்றேல் அஃதாக.

இனி இலக்கணக்குற்ற மெடுத்துரைக்கப் போந்து இலக்கியங் காட்டி நிறுத்திய தமைவுடைத்தன் றென்றனர். அஃது நன்று! நன்று!! இதுநிற்க; சத்துக்குதாரணங் காட்டியதூஉம் போலி யென்றனர்.அந்தோ! வியவகாரிக சத்துவாயிலாகப் பாரமார்த்திகசத்தை உணர்த்துவான் அங்ஙன முரைத்ததல்லது உள்ளவாறு சத்தெனப்படுவது பிரமமேனும், விவகாரத்திற் காட்டுவான் றொடங்கிய இதனைக்காட்டி நிறுத்தியதூஉமென்க.

காரண காரியங்க ளெனைத்தினுக்கு மூலமாயுள்ளது உலகப்பொருள்; அதனையே சத்தெனத் துணிந்தவர் இங்ஙனமே யன்றோ கடம்சத்தெனப்படுவ

தென்றனர்? யாம் கூறியாங் கஃதுசத்தாகாதேனும் இவருரைத்தவாற்றான் சத்தாக வியைவதியாண்டையதென்க. இனி "உற்பத்தியாவது முதற்காரண மில்லாமலுண்டாவது" என்றுரைத்துப் பின்னும் "உற்பத்திக்கும் உருமாற்றத்திற்கும் பேதமுணராமல் மயங்கி வாதாடுகின்றார்" என்றனர்: இஃது நன்று! நன்று!! எம்மை வசை கூறுவானிப்புது விதி புனைந்ததூஉமன்றி "வைதிகிகள் சிருட்டியென்றுங் கூறுவர்" என்றனர். இனி இவர் வரைந்த நூலினைக் கற்கப்புகுவார் அங்ஙனங் கோடலமையும். இவர் கற்றுணர்ந்த தருக்கநூலின்கண் உற்பத்திக்கிலக்கணம் முதற்காரணத்திற் றோன்றும்பொருள் முதற்கணத்தே தொடையையுடைத் தென்றன்றோ இயம்புந்தகைமைத்து? கணமென்பது (ஓர்காலநுட்பப்பகுதி) என்க.

கடமோ உருவிற்குப்பெய ரென்றனராகலின் கடம் குணப்பெயரேயல்லது பொருட்பெயராத லெத்துணையு மியையாதென்க. அற்றேல் கடத்தைக்கொண்டுவா, கடத்தின்க ணீரிருக்கின்றது இன்ன விவகாரங்க ளெவ்வாற்றானியையும்? உருவங் குணமாகலின் அதற்குத் தொழிலின்று. அஃது நீரிருப்பதற் கெவ்வாற்றானாதார மெனற்பாலது? இவர், நாம் கூறிய இலக்கணத்தின்கண் வியாத்தி தோடமுண்டென முன்னர்க்காட்ட முயன்று, அத்தோடங்களைத் தாமறிந்ததுணையும் எடுத்துக்காட்டியும் இறுதியின்கண் எனைத்துணையும் பயன்படாது சென்றமையின் யாதோ சில கூறி விடுத்தனர். சர்வவிரோதம் யாண்டுமுள்ளது ஒருபோது மில்லது என்றும், பாரிசேடவிரோதம் யாண்டுமுள்ளது யாண்டுமில்லது என்றும், இரண்டனுள்ளும் முற்கூறிய விரோதம் விசேடமென்றும், பின்னருரைத்தமை சாமானியமென்றும் கூறி, யாம் கூறிப்போந்தமையைச் சாமானியத்துளடக்கினர். இவர் கூறியாங்கு முதல் விரோதத்தினுக்கும் மற்றொன்றினுக்கும் ஒருபோதுமென்னும் பதமும், அதன் பரியாயமாகிய யாண்டுமென்றதூஉம் சொன்மாத்திரையான் வேறுபாடுடையதேனும் பொருள் மாத்திரையான் யாங்ஙனம் வேறுபாடுடைதெனக் கடாவியொழிக. இன்னோரன்னவற்றை யிவரே நன்குணர்த்தவல்லர் போலும்! யாண்டும் வியாத்திதோடமென்பதனை மறவியின்றிக்கூறுமாற்றலுடையாராகலின் எந்நூலுள் எவ்வாசிரியர் கூறியுள்ளாரென்றையுறுவார்க்கு அதனைத் தெற்றென்றுணர்த்துவ ரென்க.

"நையாயிக ரெல்லாரும் ஒன்றைக் காரணமென்றும், மற்றொன்றைக் காரியமென்றும் குறிப்பது சொரூபத்தைநோக்கியேயல்லாமல் வஸ்துவை நோக்கியல்ல" வென்றும், காரணம் காரியம் இவ்விரண்டு மனோபாவனையென்றுங் கூறிப்போந்தனர். இதனானே வஸ்து சொருப மன்றென்பதுவே திண்ணமென்றன்றோ புலப்படுகின்றது? இதுநிற்க; வஸ்து தனக்கெனச் சொரூப மின்றென முன்னர்க்கூறிப்போந்து, பின்னர் சொரூபத்திற்கே காரணமென்றுங் காரிய மென்றுங் கூறியதெற்றிற்கென்க. "மனோபாவனையால் காரணத்தை நோக்குழிக்காரியமும், காரியத்தை நோக்குழிக்காரணமும் இன்மையாகக்காணப்படினும் இவ்விரண்டிற்கும் நியதமாயுள்ள தெதுவோ, அது எக்காலத்துமுள்ளதே; அதுவே சத்தென்பதும் வஸ்துவென்பதும் உலகமென்பதுமாதலால், உலகு அசத்தாதல் ஒருக்காலுமில்லை" என்றனர். காரியமும் காரணமு மனோபாவனை யெனக்கூறிய வாற்றான் வஸ்துவின்கண் காரியமுங் காரணமு மின்றென்றே துணிபு. காரணத்தை நோக்

குங்காற் காரியமென்ப தின்மையேனுங் காரியத்தைநோக்குங்காற் காரண மின்றென்றியாங்ஙனங் கூறற்பாற்று? மண்ணை நோக்குங்காற் கடமென்ப தின்மையேனுங் கடத்தை நோக்குங்கான் மண்ணேனப இயாங்ஙன மின் மையாம்? "வஸ்துவோ காரணத்திற்கும் காரியத்திற்கு நியதமாயிருப்பது" என் றுங் கூறியுள்ளார். அவ்வஸ்து காரியமா? காரணமா? இரண்டி னொன் ருகற்பாலதேதுணிபு. காரியமெனின் அதற்கு மோர் காரண முளதாதல் வேண்டும்; காரணமெனின் அஃது மற்றொன்றினுக்குக்காரியப்படல் வேண் டும். இங்ஙன முடிபின்றிப்போதரலின் எல்லையின்மையென்னும் அனவத் தாதோடமெய்தும். யாம் ஆண்டை அனுகாரணவாதமறுப்பு நன்குணர்த்தி னமாகலி னிவர் இறுதியின்கண் பொரு ளின்னதெனக் கூறிற்றிலர்.

இனி "உருத்திரிதலாவது ஒருரு மற்றோருருவாய்த் திரிதல்; இதற்குதா ரணங் கடமே" என்றும், "கடவுருவமாறினு மண்மாறாது" என்றுமுரைத்த னர். உருவென்பது குணம். மண்ணின்கண் யாதுகுண நிகழ்ந்தது? வளைதல், குவிதல் முதலனவெனின் எம்மண் அக்குணங்களையெய்திற்று? எனைத்துந் தலைப்பெய்தெனின் தனித்தனி மண்ணும் அக்குணத்தைச் சிறிது சிறிதே னுமெய்தினன்றிக் கூறற்பாற்றன்று. காரிய மாறினும் காரணமாறாதென்ப தனான் வஸ்துவாகியமண் மாறாதென்றனர். யாது காரணமெனப்படுமோ, அஃது மற்றொன்றினுக்குக் காரியமெனப்படுமே. இங்ஙனமாகலின் அழிவுபா டெய்தாக் காரணம் யாது? அக்காரணத்திற் குறுப்புளதா? இலதா? உளதா யின் காரணமெனக்கூறற் பாற்றன்று; இலதேல் காரியமாதற் கியைபு டைத்தன்று. இது நிற்க;

"வனைந்த பின்னும் அழிவுபாட்டிற்குமுன்னுங் கடமுண்டாதலால் கடம் யாண்டுமில்லதா யெங்ஙனமாகும்? கடம் யாண்டுமில்லதல்லாதபோது அசத்தெப்படியாகும்?" என்றனர். அற்றேல் வனைந்த பின்னரும் அழிவுபா ட்டிற்குமுன்னருங் கடமுள தென்றிவர்க்கியாவர் கூறியுள்ளார்? யாம் அங் ஙனம் இதுகாறுங் கூறிப்போந்தோ மல்லேம். பெயர்த்தும் யாம் வரைந்தத னைச் சிறிது நோக்குங்காலஃது பூர்வபக்கத்தவர் துணிபென்றுணர்ந்து "கடம் சத்து மாகாமல் அசத்துமாகாமல் சங்கரசங்கேத நிலையினிற்கின்றது" என் றெம்பாற் கூறிப்போந்த குற்ற மெனைத்துணையுங் குற்றமன்றெனத் தாமே தெரிப்பர்.

இனி, இவர் முன்னர்க்கூறிப்போந்தவுலகவிலக்கணம் வேறு; இறுதிக் கட் கூறிப்போந்த வுலகமென்னுஞ் சொற்பொருள் வேறு. அற்றாகலின ன்றே தெள்ளிதி னோர்ந்துணர்வாராக. இ ந் து.

(1887-ஞ ஜனவரி௴ 30௳ ப்ரம்மவித்தியா)

---

## ச த் தி.

---

சத்தியென்பது, உலகின்கண் உளதாய பொருளனைத்தினையு மாராயுங் கால் அவற்றின் றோற்றஞ் சத்தியின்கணன்றி வேறன்றென்க. சத்தியெனி னும், ஆற்றலெனினும், வன்மையெனினுமொக்கும். அற்றாகலின் சத்தி யென்பது இனைத்தென்று விவகரிப்பாம்:—

கடம் மண்ணினின்று மெழுகின்றதேனும் நேர்மண்ணினின்று மெழுந்ததன்று. மண்ணினின்று மெழுந்ததுண்டேல் கடல், யாறு முதலான மண்ணினின்று முளதாகவேண்டும். அங்ஙனமின்று. கடசத்தி யெய்திய மண்ணினின்றுந் தோன்றியதென்பது திண்ணம். அற்றாகலின், கடத்துக்குச் சத்தியே யுபாதானகாரணமென்க. ஆடைக்கு நூலும் பஞ்சுங் காரணமாக நிகழினும் நூல் யாங்ஙனம் நேர் காரணமாமோ, அங்ஙனமே மண்ணுஞ் சத்தியுங் காரணமாக நிகழினுஞ் சத்தி நேர் காரணமாமென்பது தெற்றென்றுணர்க. அவ்வப் பொருட்கண்ணும் நியதமாய சத்திகள் பலவுள. எவ்வெப்பொருளினும் நியதசத்திகள் யாவை யுளவாமோ அன்னவை யவ்வப்பொருளினின்று மெழுவது திண்ணம். அவையே காரியமெனப்படுமென்க.

இனி மண்ணினின்றுங் கடமுதலியன வெழுகின்றனவேயன்றிப் படமுதலியனவெழக் கண்டாமின்று. இங்ஙனமே யவ்வப்பொருளினின்றும் அன்னவற்றிற்கினமாய பொருள்களே தோன்றுகின்றன. அவ்வப்பொருள்கள் தோன்றற்கு உபாதானகாரணமாய சத்தி, கண்கூடா நிகழ்வதன்று. யாங்ஙனமெனின் சத்தன், சத்தி, காரிய மென்னுமிம்மூன்றனுள்ளுஞ் சத்தனுங் காரியமுங் கண்கூடாம் பகுதிய; சத்தியெனின் அற்றன்று. காரியம் புறத்தேதோன்றாவழிச் சத்தியுளதெனக் கூறலொல்லாது. காரியந் தோற்றும் ஞான்றும், அங்ஙன மாகாஞான்றும் சத்திகண்கூடாகப் புலப்படுவதெவ்வாற்றானு மியைந்திலதென்க. சித்திரிகன் சித்திரிக்குங்கால் சித்திரசத்தி, பன்னோன்பாலதாகக் கொள்ளுநரன்றி, வரையாவழி யங்ஙனங்கோடலமையுமோ? அன்றே. அற்றாகலின் காரியத்தானே காரணமினைத்தென் றியம்பற்பாலதென்க. காரியமாயபுகை காணாதவழிக் காரணமாயதீ யுளதாகக் கூறுநருளரோ? அற்றன்றே. சித்திரிகன் சத்தன்; சித்திரம் வரையுமாற்றல் சத்தி; சித்திரங் காரியம். சித்திரம் வரையுஞான்று சித்திரிகனாய சத்தனும், அன்னோன் வரையுஞ் சித்திரமும் கண்கூடாக நிகழ்வதன்றிச் சத்தி கண்கூடன்று. கண்கூடாய காரியங்கொண்டு அங்ஙனமன்றாய காரணத்தைத் துணிவது அநுமானமென்பதாம்; புகையைக்கொண்டு தீயுளதெனக் கோடல் போன்றென்க. அன்னவற்றான் மண், சத்தி, கடமென்பனவாய இம்மூன்றனுள்ளும் மண்ணுங் கடமுங் கண்கூடாயுள்ளன; சத்தி யங்ஙனமன்று. காரியம் கடம்; காரணம் சத்தி. காரியமாய கடவாயிலாகக் காரணமாய சத்தி யுளதென்றனுமானிப்பது, புகையுள்வழித் தீயுளதாகக் கோடல் போன்றென்க.

இனி "கடமெனற்பாலது சத்தா? அசத்தா?" என்று காரிய காரண வாதத்தான் விவகரிக்குங்கால் யாண்டு மின்றென முடிந்ததாகலின், இது முடிந்தது முடித்தலென்னு மூத்திக்கினமென்க. இனிக் கடமேயிலதாயவழி, சத்தியுளதென் றியாண்டைக்கூறலமையும்? புகையைக்காணாத வழித் தீயுண்டென்றியாவர் கூறுவர்? கடத்தோற்ற முளதெனின் தோற்றம் பொருளென்றமையாதன்றே? தோற்றம் பொருளாங்கால் பனியின் றோற்றப்புகையும் பொருளாக, அதுகாரணமாய்த் தீயுளதெனக் கோடலமையுமன்றே? தோற்றப் புகையைக்கொண்டு தீயுளதெனக்கோடலெவ்வாற்றானுமியைந்திலதே, அங்ஙனமே யுள்ளது போன்று தோற்றுங் கடத்தோற்றத்தைக்கொண்டு சத்தியுளதெனக்கூறலெத்துணையு மியையாதென்க. சத்தாய கண்கூடாக் காண்டலான் சத்தாய அங்ஙனமன்மையை யுணர்வது அநுமானமாகலின், அசத்

தாய கடத்தைக்கொண்டு சத்தாய சத்தியை யுணர்வது எத்துணையு மியையா தென்க. எதார்த்த வனுமானத்தான் பொருள் சித்தித்தலல்லது தோற்ற வனுமானத்தா னெத்துணையுஞ் சித்தித்த லமையாதென்க. இஃது அனு மானத்தானுய குற்றமேயாம். இதனானே கடமுஞ் சத்தியு மியாண்டு மில் லனவென்றே துணியப்பட்டனவென்க. இங்ஙனமே யொவ்வோர் பொரு ளினையு மாராயுங்கால் சத்தியுங் காரியமுமில்லனவென்றே நிகழ்கின்றனவ ன்றி யோர்பொருளினின்று மேனையபொருள்கள் தோன்றுதலெனல் வாளா சழக்கேயென்க. (1886-ஆு அக்டோபர்மீ 30உ ப்ரம்மவித்தியா)

இ ந் து.

## காரணமே காரியம்.

காரணமென்றுங் காரியமென்று மெடுத்துக்கூறப்படு மிரண்டனுள்ளும் காரணங் காரியத்திற்கு நியதமாய் முன்னிற்பது; காரியமுன்னின்மைக்கு எதிர்மறை. காரணம்மண்; காரியங்கடம். மண்ணுகநின்ற ஞான்றுங் கடமி ன்று; கடமழிவெய்திய ஞான்றுங்கடமின்று; இடையேமாத்திர முளதாமெ னப்படும். அற்றைஞான்று மாராயுங்கால் மண்ணையன்றிப் பொருட்பேறி ன்று. வளைவு குவிவுமுதலாய குணங்கள் நவமாகத்தோன்றியமையானே அத னைக் கடமெனக்கூறுமெனின், அவ்வளைவு குவிவு முதலன குணமேயல்லது குணியன்றென்க. அக்குணமுங் குணியாயமண்ணின்பாலதாகத்தோற்றப்ப டும். மேலைக் கூறற்பாலதாயகுணங்கள் தோற்றுவதற்குமுன்னரும் உருவைக் குணத்தினிகழ்ச்சி யல்லது வேறு நிகழ்ந்துளது. குணமோ பொருளன்று. அக்குணந்தா னுளதோவெனின் அஃதுஞ் சொன்மாத்திரையாயும்,தோற்றன் மாத்திரையாயுமல்லதுஉண்மையானிலதென்பதுதிண்ணம். அற்றாகலின்உள தாயது காரணமாயமண்ணேயாம்; காரியமென்பது தோற்றதலும், நிகழ்த லும், அழிவுபாடெய்தலும் திரிபுணர்ச்சியேயன்றிவேறன்றென்க. இதனைச் சுட்டி முன்னர் நன்கு விளக்கினுமாண்டையோர்ந்துணர்க.

இனிமண்ணே கடமாகக் காணப்படுவதன்றி மண்ணேபோலுங் கடமு மோர் பொருளன்று. கடமுக்காலத்து மின்றென்பதுவே திண்ணம். உளதா கத்தோன்றுந் தோற்றமுமண்ணின் தோற்றமல்லது வேறன்மையின் கடமெ ன்பதோர்பொருளுளதாயவழித்தோன்றிய தோற்றமேயன்று. அற்றாகலின ன்றே காரணமேகாரியமாமென்பது தெற்றென்றுணர்க. ஒன்றே விவகாரத் தின்கண் இரண்டாக விவகரிக்கப்பட்டதேனும் உண்மையானே பொருளிர ண்டன்று, ஒன்றேயாமென்க. (1886-ஆு டிசம்பர்மீ 30உப்ரம்மவித்தியா)

இ ந் து.

## காரிய காரணம் திண்ணமன்றென்பது.

காரியமென்பது தோற்ற நிகழ்ச்சியேயன்றிப் பிறிதின்மையின் காரிய மென்பது முக்காலத்தினு மின்றெனக்கூறினுங் காரணமென்பதுளதேயெ னின் கட்டுரைக்குதும்:—

காரியமேயின்றேல் காரணமென்பதியாண்டையது?காரியநிகழ்ச்சியான ன்றோ காரணமென்றுகூறப்படுவது? காரியமேயிலதாயின் காரணமென்னுங்

கூற்றுப் பயனில்கூற்றென்றொழிக. ஒரோவொரு தந்தைக்கு ஓர் மகனுளனாயின் அவன்முன்னோ னெனற்பாலனோ? பின்னோனெனற் பாலனோ?

முன்தோன்றியோ னுளனாயின் பின்னோனென்றும், பின்றோன்றியோ னுளனாயின் முன்னோனென்றும் கூறுந்தகையதன்றி, யோர்மகனையே முன்னோனென்றும் பின்னோனென்றுங் கூறலியலாதே. முன்னோனென்னுமொழி பின்னோனையும், பின்னோனென்னுமொழி முன்னோனையும் விடாமே சங்கிலித் தொடர்பேபோன்று கோவைப்பட நிகழலின், ஒன்றனைவிட்டொன்று பிரிவெய்தா. இவ்வாறே நன்மையுந் தீமையும், ஒளியும் இருளும், உயர்வுந்தாழ்வும், இவைபோல்வன பிறவும் காணும்பகுதியவாம். நூலொன்றனைக் கண்டு, இஃது பெரிதென்னுஞ் சொன்னிகழின் சிறிதென்னுஞ்சொல்லைத் தழுவியேயுள்ளது. சிறிதென்னுஞ்சொல் இன்றாயின் பெரிதென்றியாங்ஙனங் கூறும்பகுதிய? ஆதவனைச்சுட்டிப் பெரியனோ! சிறியனோ? வென்றாசங்கை நிகழின் பிறிதோராதவன் இருக்கினன்றி யிரண்டினொன்றியம்பற்பாற்றன்று.

கடமென்பதின்றாயி னதற்கிட்ட காரியமென்பதோர் பெயருமின்றாம். காரியமேயின்றாயின் அதனையிகவாது தொடரும் காரணமென்பதேது? காரணமின்றேற் காரணமெனும் பெயருமின்றாமன்றோ? இதனானே மண்ணென்பதோர்பொருளு மின்றெனப் பகர்ந்ததன்று. அம்மண்ணுக்குக் காரணமென்னுஞ் சொன்னிகழ்ச்சி யின்றென்றாம். ஒரேமண் விவகாரநாட்டத்திற்காரணமாகவும் காரியமாகவும் விவகரிக்கப்பட்டு, உண்மையானாராயின் மேலைவிரித்த விரண்டுமின்மையாய் நிகழ்கின்றன. காரியமாக நிகழ்ந்ததூஉ மண்ணேயாம்; காரணமாக நிகழ்ந்ததூஉ மண்ணேயாம்; காரணத்தையன்றிக்காரியமின்றெனக்கூறற் கிடனாகின்றதூஉ மண்ணொன்றே. காரியம் காரணமிரண்டும் காலமூன்றினும் இன்றாகமுடியும். உளதாதலும், நிற்றலும், அழிவுபாடெய்தலு மின்றெனற்கு முன்னர் நின்றதூஉ மோர் மண்ணேயாம். ஓர்மண்ணே டமுதலானவாயும், அவையல்லவாயும், விகாரமெய்தியும், அஃதின்றியும், களகமுடைத்தாயும், அங்ஙனமன்றாயும், பலவாயும், அங்ஙனமன்றாகியும், காரியமாயும், காரணமாயுநிகழ்கின்றது. விகாரப்படுதன்முதலனவின்றேனும் விகாரமின்மைமுதலன கூறற்பாற்றேயெனின், விகாரங்காரணமாக விகாரமின்மை நிகழ்தலின் விகாரப்பாடெய்தானொன்று விகாரமின்மையெனப் பகர்தலுங் குற்றந் தங்குதற்கிடனாம். ஆகலின் விகாரம் விகாரமின்மைமுதலனவனைத்துங் கற்பனைக்கிடனாம். இதனானே மண்ணொன்றே யுளதெனவும், அதற்குக்காரணமென்றுங் காரியமென்றுங்கூறுதல்கற்பிதமென்றும்பெறற்றாம்.

(1886-௵ டிசம்பர்மீ 30உ-ப்ரம்மவித்தியா)   இ நீ ரு.

---

## சுழுத்தியின்கண் உலகுண்டா வென்பது.

---

ஒரோவழிச் சாக்கிரமாவது இவ்வுலகு காணப்படும் நிலைமைத்தெனவும், சொப்பனம் இதுபோன்று காணப்படும் நிலைமைத்தெனவும், சுழுத்தி இங்ஙனமன்றாம் நிலைமைத்தெனவும்கூறப்படுமென்க. மேலைச் சுழுத்தியின்கண் இவ்வுலகுளதாகிக்காணப்படுவதின்றா? இலதாகிக்காணப்படுவதின்றா? இந்நிகழ்ந்த ஆசங்கைகட் கியாதுவிடையென்க.

A: நீரினுளதாய அதிநுட்பமாய கிருமி, நம் கட்புலனுக்குப் புலப்படுவ தின்றேனும் பூதக்கண்ணடியின் துணையான் புலப்படுவது போன்று சுழுத்தி யின்கண் உலகு புலப்படாதேனும் மனக்கருவிகொண்டு பார்க்கும்வழிப் புலப்ப டுகின்றதேயன்று? கண்ணடியில்லாவழிக் கிருமித்தோற்றங் காணப்படுவதின் றேனும் இதனாற் கட்புலனுக்குப் புலப்படானென்று கிருமித்தோற்றமின் றென்று சாதித்தல் யாங்ஙனமியையும்? இதுபோன்று மனமின்றி நிகழும் சுழுத்தியின்கண் உலகின் தோற்றமின்றேனும் உலகு இன்றென்று யாங்ஙனங் கூறலமையும்? B: ஓராடவனுக்குப் பித்துநேர்ந்தவழி முன்னர்க் கட்புல னுக்குப் புலனாகாப் பொருள்கள் காணப்பட்டு அஃதொழியுஞான்று, அப் பொருள்க ளுளவென்று கூற வியையுமோ? கண்ணின்பால் காசமென்ப தோர் நோயணுகியவழி யொரோவொரு விளக்குப் பலவாகக்காணப்பட்டு அஃது நீங்கியவழி ஒன்றாகவே காணப்படுமெனின் காசமில்வழியும் விளக்குப் பல வென்பாருமுளரோ? யாண்டுமின்றென்க. A: பித்துடையானுக்குப் புல னாம் பொருள்கள் உண்மையன்று; காசத்தாற்காணப்படும் விளக்குகளுமங்ங னமேயாம். பொய்யலது யாதென்க; வெறுந்தோற்ற மெனப்படுதலின். நீரின் கண்ணதாய கிருமி அங்ஙனமன்று; உளதேயா மென்க. நுட்பவுருவினைக் கண்ணடி பெரிதாகக் காட்டுவதன்றி யில்லதை யுளதாகக்காட்டியதே யன்று. பித்தும் காசமும் இல்லதையுளதாகத்தோற்றச் செய்வன. இவற்றுள் கிருமியுவமானமே சிறப்புடைத்தாகலின் அதனையே யீண்டுலகுக்கெடுத்து நாட்டப்படுமென்க; உலகெனப்படுவது உண்மைப்பொருளாகலின்.

(இன்னோர் கூறிய இவ்விரண்டு உவமானங்களான் நீரின்கணுளதாய கிரு மியைக்காட்டக் கண்ணடி துணைக்கருவியாயும், எதிர்ப்பட்டபொருள்களும் விளக்குப்பலவும் காட்டப் பித்துங்காசமுமாய இவ்விரண்டும் முதற்கருவியும் துணைக்கருவியுமாக நிகழ்கின்றன. இவ்விருவகையுள் உலகுக்கு மனம் துணை க்கருவியாமா? அல்லது முதற்கருவியும் துணைக்கருவியுமாமா? எற்றென்க.)

B: கண்ணடியில்லாஞான்று கிருமியுண்டெனக்கோடல் கண்கூடன்று; அனுமானமேயாம். அனுமானம் காட்சியன்றி நிகழ்வதாகாது. கிருமிகாணு வழிக் கடுகுமுதலிய நுட்பப்பொருளாற் கண்கூடாம். எற்றெனின், கண்ணாற் கண்ட கடுகுமுதலிய நுட்பப்பொருளினைக் கண்ணடி பேருருவாகக்காட்டுந் தன்மையான், கண்ணடி இன்மையை உண்மையாகத் தெரிவிக்கும் ஆற்றலு டையதன்று; சிறியதனைப்பெரிதாகக்காட்டுந்தகையதே.

இப்பெற்றியானே கண்ணடியில்லாஞான்று, கிருமி, காண்பதரிதாயினும் காண்டற்கரிய அதிநுட்ப மென்றனுமானிக்க வேண்டற்பாற்றென்க. இது போன்று சுழுத்தியின்கண் வேறுபொருள்க ளேதுவினானேனும் சிறிதாகவே னுங் கண்டாரிலராகலின், துணைக்கருவியாய கண்ணடியுவமானத்தான் உல கைக்சத்தெனல் யாங்ஙன மமையுமென்று கூறிமறுக்க.

சுழுத்தியின்கண் அறிபவனின்மையான் உலகைக்காண்டலெங்ஙன ம மைவுடைத்தெனின், அறிபவ னின்மையேதுவாகத் துணைக்கருவியுவமான மாத்திர மெவ்வாறு அமைவுடைத்து? அற்றேல், முதற்கருவியும் துணைக்கரு வியுமாய வுவமானம் பொருந்தாமைக்குக் காரணம் யாண்டையதென்க. இது நிற்க; அறிபவனின்றென் றோர்ஞான்றுங் கூறலமைந்திலது. இனி யொன்

றுமுணராது சுகமாக வுறங்கினேனென்று யாவரும் அனுபவமாகக்கூறு கின்றமையானும், விழித்தவழிக்கூறுவதன்றி யுறங்குங்காலத் தனுபவமின் றெனின் உறங்கினேனென இறந்தகாலத்தனுபவமுரைக்கின்றமையானும், விழித்தவழிச் சுகானுபவ மின்றாமாதலானும், உறங்கினானை யெழுப்பியவழி அவன் துன்புறலானும், அஞ்ஞான்றெய்திய சுகம்போன்று பிறிதொன்றின் மையானும், கிணற்றில் வீழ்ந்த பாத்திர மெடுக்கச்சென்றோனுக்கு அப்பாத்தி ரம் நீருட்கிடைப்பினும் புறத்தெய்தினன்றி யுரைக்க ஏலாமையானே நீருட் பாத்திரங் கிடைக்கவில்லையென்று கூறல் அடாமையானும் சுழுத்தியவத்தை யின்கண் அறிவுளதென்றே கூறல் அமைவுடைத்தென்க.

இதுகாறுங் கூறிப்போந்தமையானே உலகுக்கு மனம் முதற்கருவியும் துணைக்கருவியுமாமென்றும், சுழுத்தியின்கண் உலகின்றென்றுங் கூறப்பட்டன வென்க.

சுழுத்தியின்கண் உலகின்றெனக்கூறின் விழித்திருக்கு மேனையோர்க் குக் காணப்படுகின்றதேயெனின், அன்னோர் நிற்பது சாக்கிர நிலைமைத்தாக வின் காணப்பட்டதென்க. இதுகாறும் சுழுத்தியின்கண் உலகின்றென்றுரை க்கவந்தாமன்றிச் சாக்கிரத்தன்றென் றொழிக.

(ப்ரம்மவித்யா. 1887ஆு ஜனவரிமீ 30உ) இ ந் து.

## ஆகாயவாதம்.

பூதபௌதிகங்களாய வுலகப்பொருளனைத்தினுஞ் சத்தென்ப துண் டென்பதுண்மையேயாம். சத்தெனினு மின்மையெனினுமபாவமெனினு மாகா யமெனினுமமையும். சந்துளதன்றாகத் தோன்றியதேனு முண்டென்பதே துணிபுடைத்து. யாங்ஙனமெனின் நன்றுவிளக்குதும்:—

சுவர்கட்டிய ஞான்று அதன்கண்உளதாய ஈரத்தையுட்டினவாயுவெளிப் படுத்துவதென்பது திண்ணம். சத்தென்பதாண்டையின்றேலீரம்வெளிப்பட்ட தெங்ஙனம்? ஒருவாற்றானுமின்றேயாம். இருப்புப் பாத்திரமுதலியவற்றை யனலிலிட்டெரிக்குங்கால் கீழ்ப்பக்கத்தே படுங் கனலின்சூடு மேலைப்பக்கத் தேதோன்றக் கண்டுள்ளாம். இதனானே யப்பாத்திரத்தின்கணுளதாய சந்தா னன்றா அச்சூடெழுந்ததாகத் தெரிகின்றாம். அற்றேலற்றாக. இனிமிக்க விடம்பெறுவதாய ஓர்பாரப்பஞ்சினை யந்திரத்தினழுத்த வப்பஞ்சே சிறிதிட த்தினடங்குவதைக் கண்டுள்ளாம். வாளாவைத்தக்கால் மிக்கசந்தும் யந்திரத் திலழுத்தியகாலைச்சிறிது சந்துமுளதாகத்தோன்றும்.இங்ஙனமேபொருள்கள் நெருக்கமின்மையானே மிக்கசந்துமஃதுண்மையானேகுறைவுமுறக் காண்கின் றாமன்றா? அற்றாகலின் சந்தின்றியாண்டுமெப்பொருளுமின்றென்பதே துணி பென்க. மலை, கருங்கற்பாறையேனு மதன்கணின்றும் புனல் பெருகக் காண்கின்றாமன்றா? சந்தியாண்டுளதோ ஆண்டைப்பொருணிகழ்ச்சி யின் றென்க. சல்லடையின்கண் சந்தும் பொருளுமுண்டென்பது திண்ணம். சந்துளதாயவிடத்துவேயின்று;வேயின்கண்சந்துளதாம். இங்ஙனமேசெங்கல் ஒன்றனையாயுமிடத்துச் சந்தும் பொருளுமுள்ளன. சந்துளதாமிடத்துச்செங் கல்லென்ப தொன்றின்று. அச்சந்தொழிந்தகல்லின்கண்ணும் சந்துளதா என்றாராயின் ஆண்டுஞ்சந்துநிகழ்கின்றது. இவ்வாறுதொடர்ந்துசெல்லின்,

அணுநிகழ்கின்றது. அவ்வணுவினையு மாயின் சந்து நிகழ்கின்றது. சந்தொழிய நின்ற அணுவையுமாயுங்கால் பரமாணுநிகழ்கின்றது. அதனையுமாயுங்கால் சந்துநிகழ்கின்றது. இங்ஙனமே எம்மட்டுச்செல்லினுஞ் சந்தின்றி எத்துணையணுவினையும்காண்டலரிது. சந்துளதாயவழிப் பொருளின்று; பொருளுளதாயவழிச் சந்துளது. சந்தின்றி பொருணிகழ்ந்தானன்றிப்பொருள்சித்தித்திலது. அற்றாகலின் சந்தின்றிப் பொருள்கிடைப்ப தரிதினுமரிதென்க.

பரமாணுவாய வதிநுட்பவணுவிற் சந்தின்றென்றும், இரண்டு பரமாணு சேர்ந்தவிடத்துமாத்திரம் இடையே சந்துண்டென்றும் கருதுவர் சில்லோர். யாதுமிலதாயவெற்ற வெளியின்கண் ஓர்தூணினை நிறுத்திவைப்பின், வைத்தற்குமுன்னர் நிரம்பி முற்று மாண்டிருந்த இன்மை எங்கேனுமோடிப்போயதோ? தூணினைஎடுத்து விடின் பெயர்த்தும் அவ்வின்மை அங்கெய்தியதோ? இரண்டுமின்று. ஆண்டிருந்தவின்மை யாதெய்தினும் யாதுகழியினும் வருதல் போதலின்றாம். தூணெனல் பலப்பலபரமாணு நிறைந்துளதாகலின் யாண்டும் நிரம்பிய இன்மை பரமாணுவின்கண்மாத்திரமிலதென்ப தொருவாற்றானுமியம்பலொல்லாதென்க. ஆகலின் இவ்வுலகுமுற்றுமின்மையின்மையே. பெரும்பான்மையிலதேனுஞ்சிறுபான்மையேனுமுண்மை என்று வாதிப்பதற்கொல்லாதென்க. ஆகலின்யாண்டுமொகாய முளதென்பதுபெற்றாம். சத்தாய்த்தோற்றுதல்அதிட்டானத்தைநோக்கியென்க. அதிட்டானமென்பதுவேறு.

(ப்ரம்மவித்யா. 1887ஞ மார்ச்சுமீ 30வ) **இ ந் து.**

# ச ம் ப ா ஷ ண .

---

**சாந்தன்.** அறிவு முன்னோ? அறிபடுபொருள்முன்னோ?

**கோற்றன்.** அறிபடு பொருளேமுன்.

**சா.** அறிவை முன்னென ஏன் கூறப்படாது?

**கோ.** அறிவு ஒருகாலத்தில் தோன்றி நசித்தலாலென்க.

**சா.** அறிபடுபொருளே ஒருகாலத்தில் தோன்றி நசிப்பதாகக் கூறப்படாதோ?

**கோ.** அறிபடுபொருள் என்றுமிருக்கவும், அறிவு ஒருபோது தோன்றி நசிக்கவும் காண்கையால் அங்ஙனங் கூறப்படாது.

**சா.** அறிவே என்று மிருப்பதெனக் கூறற்கியைந்திலதோ?

**கோ.** அறிவு என்பது விஷயங்களின் வேற்றுமையை உணர்வது; அறிவெனினும், சித்தெனினும், திருக்கெனினு மொக்கும். அறிபடுபொருளென்பது அங்ஙன முணராதது. அறிபடுபொருளெனினும், அசித்தெனினும், திருசியமெனினும், சடமெனினும் ஒக்கும். அதுவே உலகம். சரீரம், கருத்தரிக்குங்கால் அறிவின்றிப் பின்னருதித்துப் பிரேதத்திலின்மையாவதைக்காண்கின்றோம். இதனானே அறிபடுபொருளான சரீரம் கருத்தரிக்குங்காலத்தும், பிரேதமாங்காலத்தும், அறிவோடுகூடியஞான்றும் இருக்கின்றதாகவும், அறிவு இடைநடுவில் மாத்திரமிருந்து நீங்குவதாகவும் காணப்படுகின்றமையான் அறிபடுபொருளே முன்பெனவும், அறிவு பின்பெனவும் ஆகின்றன.

**சா.** உலகமானது அறிபடுபொருள். உலகமென்று கூறுங்கூற்றே அறிவின்கண்ணது. கடத்தைக் கடமெனவும், படத்தைப் படமெனவும் பகுத்துணர்ந்துகூறச் சடத்தாலாகா. அறிவே யறிந்துகூறவேண்டுவது. கருத்தரிக்குஞான்று அறிவில்லையென வுணர்ந்ததும் அறிவே; ஈற்றிற் பிரேதமென வுணர்ந்ததும் அறிவே; இடைநின்றகாலத்து அறிவோடு நின்றதெனவுணர்ந்ததும் அறிவே. இங்ஙனம் முக்காலத்தும் அறிவு காணப்படுகின்றமையான், அறிவு ஓர்போதுமாத்திரம் தோன்றிமறைகின்றதென் றெங்ஙனங் கூறற்பாற்று?

**கோ.** ஓர் தேகத்தைச்சுட்டிப் பேசுங்காலத்து, அதுமட்டும் நின்றன்றோ பேசவேண்டுவது? வேறு தேகத்தைப்பற்றியும் அதின்கணுள்ள அறிவைப் பற்றியும் பேசுதல் தக்கதன்றே.

**சா.** அங்ஙனமாயின் அத்தேகத்தையும், அத்தேகத்தின்கணிகழும் அறிவையும் சுட்டிமாத்திரம் பேசுதல்வேண்டும். தேகம் பிணமாங்கால் அப்பிணத்தின்கண் அறிவில்லை. அதனால் பிணமெனவும், உலகெனவும், அவை யுளவெனவும், இலவெனவும் அறிவதியார்? வேறோர் அறிவு அறிகின்றதெனின், அவ்வறிவுக்கே வியஷ்டியான சரீரமும், சமஷ்டியான வுலகமும் தோற்றப்படுகின்றன. இதுகொண்டே அறிவு முன்னரென்றாம். கருத்தரிக்கு ஞான்றும், பிரேதமாஞான்றும் ஏனைய அறிவுக்கு அறியப்படுகின்றமைகொண்டு அறிபடுபொருளை முக்காலத்து முளதெனக்கூறுகின்றா மெனின், அறிவுக்கு வியஷ்டி சமஷ்டியான வுலகம் காணப்படுவதுபோன்று கருவையும், பிரேதத்தையும் காணு மறிவுக்குச் சமஷ்டியான வுலகமும், அதிலடங்கிய வியஷ்டியும் (வியஷ்டியில் பிரேதமும் கருவும்) காணப்படுகின்றன. இதனானே அறிபடுபொருள் முன்பெனவும், முக்காலத்து முளதெனவும், அறிவு பின்பெனவும், ஓர்காலத்தேயுளதெனவும் கூற வியையா.

**கோ.** அறிபடுபொருள் காரணம்; அறிவு காரியமாகலின் காரணம் முக்காலத்ததெனவும், காரியம் ஓர்காலத்ததெனவும், காரணம் முன்பெனவும், காரியம் பின்பெனவும் யாருஞ் சம்மதமாக ஒப்புக்கொள்ளத்தக்கனவே.

**சா.** இஃது எமக்கும் உடன்பாடே. ஆனால் அறிவைக் காரணமென்றும் அறிபடுபொருளைக் காரியமென்றும் பகர்கின்றாம்.

**கோ.** உலகம் அழிந்திலது; அறிவோ அழிவுறுகின்றது. ஆகலின், உலகம் முன்பெனவும் அறிவு பின்பெனவும் கூறத்தகும்.

**சா.** அறிவு அழிந்திலது; உலகமோ அழிவுறுகின்றது. ஆகலின், அறிவு முன்பெனவும் உலகம் பின்பெனவும் கூறத்தகும்.

**கோ.** மஞ்சள் சுண்ணம்சேர்ந்தவிடத்துச் சிவப்புத் தருமம் தோற்றப்படுவதுபோன்று, பூதச்சேர்க்கையின்கண் அறிவு காணப்படுகின்றமையான் உலகு முன்னாகும்.

**சா.** கடலின்கணுள்ள நீரில் அலையாதி தோன்றுவபோல் அறிவின்கண் உலகு தோன்றுகின்றதாகலின் அறிவே முன்னாகும்.

**கோ.** கடியாரம் முக்காலத்தும் ஓட்டம் ஓர்காலத்து முள்ளனபோல் உலகு முக்காலத்தும் அறிவு ஓர்காலத்து முள்ளனவால் உலகே முன்னாகும்.

சா. கடியாரம் முக்கால்த்தும் ஓட்டம் ஓர்கால்த்து மிருத்தலுண்மை தான். அதுபோல் அறிவு முக்காலத்தும் அறிபடுபொருள் ஓர்காலத்துமுள் ளனவாக வுவமேயப்படுத்தல்வேண்டும்.

கோ. அறிவு சரீரத்தின்கண் ஓர்காலத்துக்காணப்படுந் தர்மம்; அது ஓர் பொருளன்று.

சா. அறிவின்கண் சமஷ்டி வியஷ்டியான உலகு ஓர்காலத்துக் காணப் படுந் தர்மம்; அது ஓர் பொருளன்று.

கோ. அறிவு தொழிலா? முதலா?
சா. உலகம் தொழிலா? முதலா?
கோ. உலகம் முதல்.
சா. அறிவு முதல்.
கோ. அறிவு எங்ஙனம் முதல்?
சா. உலகம் எங்ஙனம் முதல்?
கோ. அறிவு, அறிதலான தொழிலால் முதலன்று; தொழிலே.
சா. உலகம் தோற்றுதலான தொழிலால் முதலன்று; தொழிலே.
* கோ. அறிவு முதலானாற் பொருளென்னை?
சா. உலகம் முதலானாற் பொருளென்னை?
கோ. உலகம் பூதக்கூட்டமேயாம்.

சா. பூதக்கூட்டத்தையன்றி யுலகிற்குப் பொருள் யாது ? அப்பூதமும் தனக்குக் காரணத்தை நோக்க அணுவும், அஃதும் ஆராய்வின்கண் அபாவமுமாகுமே.

கோ. உலகில்லாவிடத்து அறிவு காணப்படுகின்றதா?
சா. அறிவில்லாவிடத்து உலகு காணப்படுகின்றதா?
கோ. சரீரமில்லாதகாலத்து அறிவுளதா?
சா. அறிவில்லாதகாலத்துச் சரீரமுளதா?
கோ. உலகைவிட்டு அறிவுளதோ?
சா. அறிவைவிட்டு உலகுளதோ?
கோ. அறிவு முக்காலத்துள்ள சத்தா?
சா. உலகு முக்காலத்துள்ள சத்தா?
கோ. பிராணன்நீங்கிய பின்னர் அறிவுளதா?
சா. அறிவுநீங்கிய பின்னர்ப் பிராணனுளதா?

கோ. ஓட்டமொழிந்த கடியாரத்தைக் காண்பதுபோன்று, உலகற்ற அறிவைக் காண்கின்றோமா?

சா. ஓட்டமொழிந்த கடியாரத்தைக் காண்பதுபோன்று அறிவொழி ந்த உலகத்தைக் காண்கின்றோமா?

கோ. அறிவிலாவிடின் உலகிராதோ?
சா. உலகிராவிடின் அறிவிராதோ?

கோ. நூதனமாய் ஓர் நகரத்தை யின்றுகாண்போமாயின், அஃது நேற் றின்றோ?

சா. இன்று நகரம் பிரத்தியக்ஷம்; நேற்றனுமானம். இன்று அறிவில் பிரத்தியக்ஷம்; பிரத்தியக்ஷத்தில் நகரம். நேற்றைப்பற்றி அறிவில் அநுமானம்; அநுமானத்தில் நகரம். எவ்வாறுநோக்கினும் அறிவே முன்னுகும்.

கோ. உள்ளவுலகு அறிவின்மையான் ஓடிடுமோ?

சா. உள்ள அறிவு உலகின்மையான் ஓடிடுமோ?

கோ. அறிவு எங்குளது?

சா. உலகு எங்குளது?

கோ. உலகு வெளியான இன்மையிலுளது.

சா. இன்மையிலுள்ளவுலகு இன்மையேயாகு மன்றோ?

கோ. பெட்டியிலுள்ள புத்தகமும் பெட்டியாமோ?

சா. இன்மை பூரணமாகலின், அதிலுள்ள உலகும் இன்மையேயாகும்; பெட்டி பூரணமன்றாகலின், அதிலுள்ள புத்தகம் பெட்டியாகாது.

கோ. உலகில்லா எவ்விடத்து அறிவு உளது?

சா. அறிவில்லா எவ்விடத்து உலகுளது?

கோ. உலகிற்கு அறிவு பின்னமா? அபின்னமா?

சா. அறிவிற்கு உலகு பின்னமா? அபின்னமா?

கோ. உலகிற்கு அறிவு அபின்னமே.

சா. அறிவிற்கு உலகு அபின்னமே.

கோ. அறிவைத் தனியே கண்டாருளரோ?

சா. உலகைத் தனியே கண்டாருளரோ?

கோ. அறிவு எவ்வண்ணமுளது?

சா. உலகு எவ்வண்ணமுளது? (ப்ரம்மவித்யா. 1887ஸ்ரீ ஜனவரிமீ 30உ)

கோ. உலகு பூதமயமாயுள்ளது.

சா. அறிவுபகுத்துணரும்தன்மையாயுள்ளது.

கோ. அறிவு உருவா? உருவமற்றதா?

சா. உலகு உருவா? உருவமற்றதா?

கோ. உலகம் உருவே.

சா. உலகம் உருவாயின் அறிவும் உருவே.

கோ. அறிவு எங்ஙனம்உருவாகும்?

சா. உலகு எங்ஙனம்உருவாகும்?

கோ. உலகு கண்ணுக்குப்புலப்படுவதால் உருவே.

சா. கண்உடலன்றியுளதோ? உடல் உலகன்றியுளதோ?

கோ. உலகன்றி இன்றும்.

சா. ஓர்பொருளினை யுளதில்தெனை வாயுங்கால் அதற்குப்பின்னமா யிருந்தன்றோ வுணர்தல்வேண்டும்? அங்ஙனமே உலகைப்பின்ன மாயுணர்ந்தார் யாவர்?

கோ. யாருமிலர்.

சா. பின்னை உருவெனலை அங்கீகரித்தலெங்ஙனம்?

கோ. உலகின்கணிருந்து சுகதுக்கங்களை அனுபவிக்க, எங்ஙனம்உலகு இன்றெனக்கூறுவது?

சா. அனுபவித்தவர் யாவர்? உளரேல் பின்னமாயிருத்தல்வேண்டும்.
கோ. அறிவினின்றே யுலகுண்டாவது எங்ஙனம்?
சா. தூக்கத்திற்காணும் சொப்பனஉலகு அறிவின்கண்ணேயுண்டாகின்றதன்றோ?
கோ. சொப்பனஉலகம் சுத்தமித்தையன்றோ?
சா. இவ்வுலகுமாத்திரம் சத்தியமோ? ஆராய்ச்சியின்கண் பொருளின்றிப்போதலானும், வேற்றுமையாகநின்றுகண்டார் ஒருவருமிலராதலானும் மித்தையெனற்கையமா?
கோ. அவ்வறிவு சரீரமன்றோ?
சா. அச்சரீரம் அறிவன்றோ?
கோ. இங்ஙனம்செல்லின் அனவத்தாதோடமெய்துமே.
சா. அனவத்தாதோட மின்றிக்கூறுவது உமதுகடமையே. உலகு முன்னரெனக் கூறியதன்மேல் அதைமறுக்க அறிவென்றுகூறினோம். நீர் அங்ஙனங் கூறாவிடில் யாமும் கூறோம்.
கோ. உலகினின்றேஅறிவுண்டாவதற்குச் சரீரஅவயவத்தானும்,கல்வியானும், பழக்கத்தானும் அறிவுபெறப்படுவதேபோதுமான சாக்ஷியன்றோ?
சா. உலகெனலே அறிவாயிருக்கவும், அறிவன்றியுலகில்லாதிருக்கவும் கண்டும் மீண்டும் உலகினின்று அறிவு உண்டாமெனக் கூறலெங்ஙனமாகும்? அன்றிச் சொப்பனத்தின்கண் அறிவின்காரியமான அவ்வுலகில் அங்கு சரீரதர்ம்மத்திற்கியைய அறிவுகாணப்படினும் அவ்வறிவின்கணிருக்கும் வியட்டிதேகத்திற்கும், சமட்டியுலகிற்கும் அறிவேகாரணமன்றோ?
கோ. அறிவின்காரிய முலகெனின், அறிவிற்கும் உலகிற்கும் பேதம் தோன்றப்படாதே.
சா. சந்திரனில்லா இரவின்கண் ஆகாயத்தில் சந்திரனிருப்பதாகநினைக்கின், அந்நினைவுக்கு அச்சந்திரன் பேதமாகக் காணப்படினும் அபேதமன்றோ? அங்ஙனமே சொப்பனவத்தையின்கண், அறிவினின்றுந்தோன்றிய வுலகு பேதமாகத்தோற்றினும் அபேதமேயாம்.
கோ. உலகிருந்துதானே ஆதியில்ஜீவப்பிராணிகள் தோன்றியிருக்கவேண்டியது.
சா. அறிவிருந்துதானே ஆதியில் உலகுதித்திருக்கவேண்டுவது.
கோ. சுழுத்தியின்கண் உலகின்றோ?
சா. சுழுத்தியின்கண் உலகுளதோ?
கோ. இருப்பதனாலன்றோ ஏனையோர் அறிவது?
சா. ஏனையோர் அறிவுடனிருப்பதாலன்றோ உலகுகாணப்படுவது?
கோ. உலகினின்றன்றோ அறிவைக்காண்பது?
சா. அறிவினின்றன்றோ உலகைக்காண்பது?
கோ. நீரினின்றும் அலையுண்டாவதுபோன்று உலகினின்றும் அறிவு தோன்றுகின்றதன்றோ?

சா. நீரினின்றும் அலைஉண்டாவதுபோன்று அறிவினின்று உலகுண்டாவதாகக்கூறப்படாதோ?

கோ. கண்டமான அறிவினின்றும் அகண்டமான வுலகம் எங்ஙனமுதிக்கும்?

சா. கண்டமான உலகினின்றும் அகண்டமான அறிவு எங்ஙனமுதிக்கும்?

கோ. அரூபமான அறிவினின்றும் ரூபமானவுலகு தோற்றுமா?

சா. உலகம், காரியகாரணசோதனையில்லாமற்போதலானும், ஒன்றன் அல்லது பலவின்கூட்டத்தையன்றி அபாவப்படுதலானும், இன்மையில் தோற்றுவது இன்மையேயாதலானும், பொருளின்மைபற்றிப் பொருட்பெயரன்மையானும் இன்மையாயவுலகு ரூபமெனல் எங்ஙனம் அமையும்?

கோ. இன்மையாய அறிவினின்றும் உண்மையாய உலகு தோற்றுமா?
சா. இன்மையாயவுலகினின்றும் உண்மையாயஅறிவுதோற்றுமா?
கோ. ஓர்போதுளதாயஅறிவினின்றும் என்றுமுளதாயவுலகுதிக்குமா?
சா. ஓர்போதுளதாய வுலகினின்றும் என்றுமுளதாய அறிவுதிக்குமா?
கோ. அநித்தியமாய அறிவினின்றும் நித்தியமாயவுலகுதோன்றுமா?
சா. அநித்தியமாயவுலகினின்றும் நித்தியமாயஅறிவுதோன்றுமா?
கோ. கற்பிதமான அறிவினின்றும் ஸ்வயமானஉலகுதிக்குமா?
சா. கற்பிதமானஉலகினின்றும் ஸ்வயமான அறிவெழுமா?
கோ. சித்தினின்றும் சடம்நிகழுமா?
சா. சடத்தினின்றும் சித்துநிகழுமா?

கோ. வியாப்பியமானஅறிவினின்றும் வியாபகமான வுலகுதிப்பதெங்ஙனம்?

சா. வியாப்பியமானவுலகினின்றும் வியாபகமான அறிவுதிப்பதெங்ஙனம்?

கோ. உலகு இருந்து தோற்றுவதால் சத்தேயாகும்.
சா. அறிவு இருந்துதோற்றுவதால் சத்தேயாகும்.
கோ. அறிவிருப்பதுண்மையேல் உலகின்றியிருத்தல்வேண்டும்.
சா. உலகிருப்பதுண்மையேல் அறிவின்றியிருத்தல்வேண்டும்.
கோ. உலகு காரணமாகவின் அதுவே முன்னாகும்.
சா. அறிவு காரணமாகவின் அதுவே முன்னாகும்.
கோ. உலகு குணியும்தர்மியுமாதலால் முன்னெனக்கூறவேண்டும்.
சா. அறிவு குணியும் தர்மியுமாதலால் முன்னெனக்கூறவேண்டும்.

கோ. அறிவு என்பது தொழிற்பெயராகவின் எங்ஙனம் குணியும் தர்மியுமாகும்?

சா. உலகு என்பது சமஸ்கிருத பாஷையில் காணப்படுவது என்னும் பொருள் தருவதால் எங்ஙனம் குணியும் தர்மியுமாகும்?

(ப்ரம்மவித்யா. 1887ஞ மார்ச்சுமீ 30௳)

கொ. அறிவினின்றும் உலகம் உதிப்பதென்றுரைப்பது சொல்லால் சொல்வதன்றி அநுபவமின்றே.

சா. உலகினின்றும் அறிவுதிப்பதென்று நீரும் சொல்லால் சொல்வதன்றி அநுபவமின்றே.

கொ. அநுமானத்தால் கூறுகின்றேம்.

சா. யாமும் அநுமானத்தால் கூறுகின்றேம்.

கொ. எங்ஙனம் அநுமானம்?

சா. உமக்கு எங்ஙனம் அநுமானம்?

கொ. சாணியில் தோன்றும் புழுவுக்கு அறிவு அபின்னமாயிருப்பது போல், சரீரத்திலும் அறிவு அபின்னமாய்க் காணப்படுகின்றது.

சா. சொப்பனத்தின்கண் தோற்றும் உலகிற்கு அறிவு எங்ஙனம் முதற் காரணமோ, அறிவினின்றும் அச்சொப்பனவுலகம் எங்ஙனம் தோற்றியதோ அங்ஙனமே இப்போதுகாணப்படும் இவ்வுலகிற்கும் அறிவே முதற்காரணமும், அவ்வறிவினின்றே யுலகம் தோற்றியதுமாம்.

கொ. இவ்வாறே பேசிக்கொண்டு வந்தால் முடிவுபெறவில்லையே. ஆதலால் முடிவு சொல்லவேண்டும்.

சா. உலகும், உலகத்தை அறியும் அறிவும் ஒன்றைவிட்டு ஒன்று பிரிந்திரா; சூரியனும் பிரகாசமும்போலாகலின்.

கொ. ஆனல் உலகை அறியும் அறிவு, அறிபடுபொருளான உலகு ஆகிய விரண்டும் நித்தியமும் சத்துமா?

சா. அல்ல; அநித்தியமும் அசத்துமேயாம்.

கொ. பின்னை, நித்தியமும் சத்துமாயிருப்பதியாது?

சா. சுழுத்தியின்கண் சாக்ஷியாய்விளங்கும் சலனமற்ற அறிவே நித்தியமும் சத்துமாம். (அதன்கண் உலகும், உலகை அறியும் சலனமுள்ள அறிவும் ஓர்காலத்துத்தோற்றி விளங்கி மறைகின்றனவாம்.)

கொ. சுழுத்தியின்கண் அறிவு உளதென்பதெங்ஙனம்?

சா. சுழுத்தியின்கண் சுகமாய் நித்திரை செய்தேனென்று சொல்லுமிடத்துச் சுகானுபவம் காணப்படுகின்றமையாலும், அவ்வனுபவம் அறிவினுக்கே விளங்கவேண்டுமாகையாலும்,அதைத்தள்ள யாராலுங் கூடாமையாலும் அறிவுளதென்பதே திண்ணம்.

(ப்ரம்மவித்யா. 1887ஹ ஆகஸ்டு 31வ

ஓர் நண்பன்.

## அறிவே உலகம். (திருக்கே திருசியம்.)

அறிவென்பது பொருள்களின் வேற்றுமைகளைத் தெரிந்துகொள்ளுந் தன்மையது; உலகமென்பது அங்ஙனம் தெரிந்துகொள்ளாத் தன்மையது. அறிவெனினும் சித்தெனினும் திருக்கெனினு மமையும்; உலகமெனினும் சடமெனினும் திருசியமெனினும் பொருந்தும்.

இவ்விரண்டில் ஒன்றுகாரணமும் ஒன்று காரியமுமாகும். "வெற்றிலைபாக்குச் சுண்ணமிம்மூன்றுஞ்சேர்ந்தவிடத்துச்சிவப்புத்தருமமுண்டாவதுபோல் பூதக்கலப்பில் அறிவென்னுந் தர்மமுண்டாவதால், தேகமே காரணமெனவும் முன்னெனவும் அறிவெனவும் கூறப்படும். இதுகொண்டே உலகே அறிவெனவுரைக்கப்படு" மெனின், அறிவினின்றும் உலகுதோற்றி அதனினின்றுமே தேகம் நிகழலின் அறிவே உலகாம். யாங்ஙனமெனின், சொப்பனத்தின்கண் அறிவே உலகாகி மேற்படி உலகான சமட்டியில் வியட்டிசரீரங்கள் நிகழ்ந்து அதில் அறிவுகாணப்படுவ துண்மையன்றோ? அச்சரீரங்கட்கு அவ்வறிவு பேதமாய்த் தோற்றினும் சொப்பனவுலகிற்கு முதற்காரணமாயுள்ள அறிவின் பிரதிபலனமெனவே கொள்ளத்தக்கது. எங்ஙனமெனின் ஏகமான சூரியன் கண்ணாடியிற் பிரதிபலித்துப் பிரகாசத்தைத்தரும்ஞான்று, பிரதிபலனபிரகாசம் கண்ணாடியினின்று தோற்றினும் உண்மையில் சூரியனிலிருந்தே தோற்றுகின்றது. அங்ஙனமே சொப்பனவுலகிற்கு முதன்மையான அறிவு, சொப்பன சரீரத்தின்கண் பிரதிபலித்து அச்சரீரத்திற் கபேதமாய்த் தோற்றினும் உண்மையில் வேறன்றோ? இத்திருட்டாந்தவாயிலாக ஆராயின் நூலே எங்ஙனம் ஆடையோ அங்ஙனமே அறிவே சொப்பனவுலகமாகவும், ஆடையில் நூல் எங்ஙனம் நிறைவோ அங்ஙனமே சொப்பனவுலகில் அறிவு நிறைவாகவும், நூலையன்றி ஆடை எங்ஙனமுக்காலுமின்றோ அங்ஙனமேஅறிவையன்றிச் சொப்பனவுலகு முக்காலு மின்றாகவும், ஆடைக்குப் பொருளின்றி எங்ஙனம் சொல்மாத்திரமும் தோற்றல்மாத்திரமுமாமோ அங்ஙனமே சொப்பனவுலகுக்குப் பொருளின்றிச் சொல்மாத்திரமுந் தோற்றல்மாத்திரமுமாமென்க.

சாக்கிரத்தின்கணுள்ள அறிவு, சொப்பனத்தில்காணும் அண்டபிண்டசராசரமாயிருத்தலினாலும், அவ்வளவிலும் அவ்வறிவு பூரணமாயிருத்தலினாலும், அவ்வறிவையன்றி அவையின்மையானும் அறிவே சொப்பனவுலகெனவும் அறிவுவியாபகமும் உலகு வியாப்பியமெனவும் கூறத்தகும்.

அறிவின் காரியம் சொப்பன மென்பதுபற்றி அறிவே சொப்பனவுலகேனும், அறிவே சாக்கிரவுலகென லெங்ஙனமியையுமெனின், கயிற்றைமயக்கத்தால் அரவெனக் காணும்போது அரவாகவும் தெளியும்போது கயிறாகவும் காணப்படுவது கண்கூடே. அறிவு, கருதியவண்ணம் காணப்பட்டதன்றிக் கயிற்றின்கண் அரவுதோற்றலும் நிகழ்தலும் அழிவுபாடெய்தலு மின்றெனபதே துணிபுடைத்து. அரவுதோற்றமேனும் எதினின்றும்தோன்றிற்றெனின் அறிவினின்றே தோன்றிற்று; இதனானே அரவுக்கு அறிவே முதற்காரணமாம். இங்ஙனமே மண்ணின்கண் கடம், தோற்றலும் நிகழ்தலும் அழிவுபாடெய்தலுமின்று. இவ்வாறு விசாரித்தற்கு முன்னர் உண்மையாகத்தோற்றின கடம், அறிவினின்றே தோற்றிநிகழ்ந்து, தெளிந்தஞான்று அழிவுபாடடைந்தது. ஆகலின் அறிவே கடமாம். சோதனைக்குமுன் உண்மையாகத்தோற்றியகடம், அறிவினின்றேஎழுந்து தெளியும்வரையில்நிகழ்ந்து தெளிந்தபின்பு இன்றெனத்துணியப்பட்டது. அறிவும் மண்ணுமிருந்தாலன்றிக் கடம்தோற்றப்படாதெனின், மண்ணையல்லது கடமெங்ஙனமின்றே. அங்ஙனமே அணுவையன்றி மண்ணும், பரமாணுவையன்றி அணுவுமின்றாகி, அதுவும் ஆராய்ச்சியில் திண்ணமன்றெனத் துணியப்படுகின்றது. அறிவையன்றிக் கடமெங்ஙனமின்றோ அங்ஙனமே மண்முதலியயாவு மின்றெனத்

தீர்வாம். இவ்வாறு உலகிலுள்ள எந்தப் பொருள்களையும் ஆராய்ச்சிசெய்யின் அறிவின் காரியமாகின்றது. இதனானே அறிவே உலகெனக் கூறப்பட்டதென்க. (ப்ரம்மவித்யா. 1888௵ பிப்ரவரி௴ 29௳)

ஓர் நண்பன்.

## அறிவோ உலகம்?

நாளது ௧௮௮௮௵ ஏப்ரல்௴ ௭௳ வெளிப்பட்ட தங்களது பத்திரிகையில் (பிரஹ்மவித்தியா)விலிருந்து எடுத்துப்பதித்துவிடுத்த (அறிவே உலகம்) என்னும் விஷயத்தை யாம் பார்த்தோம். அறிவு, உலகம் என்பவைகள் இரண்டுபொருள்களல்லவெனவும், இரண்டும் ஒரே பொருளெனவும் அதனையெழுதிய நண்பர் சித்தாந்தப்படுத்துகிறார். அன்றியும், அவர் வெற்றிலைபாக்கு சுண்ணம் இம்மூன்றுங்கூடிய வழிச் சிவப்பு நிறமுண்டாவதுபோலப் பிருதிவி முதலிய பூதங்களொன்று கூடியவழி அறிவுண்டாதலின், தேகமே அறிவுக்குக்காரணம் எனவும், அதனால் உலகமே அறிவு எனவுங் கூறுமோர் ஸித்தாந்தியை மறுக்கின்றார். இதனால் அறிவேஉலகம் என்பது ஒருவர்மதமும், உலகமே அறிவு என்பது மற்றொருவர் மதமுமாக ஏற்படுகின்றது. உலகமே அறிவு என்பவரது நியாயத்தை அறிவேஉலகம் என்பவர் வருவித்துக்காட்டியதேயன்றி, அந்தநியாயத்தை மறுத்துப் பின்னர்த் தமது ஸித்தாந்தத்தை நாட்டினாரில்லை. மேல், தமது ஸித்தாந்தத்தை நாட்டுதற்கு (சொப்பனத்தின்கண்ணறிவேயுலகாகி, அதிற்சரீரங்கணிகழ்ந்து அறிவுகாணப்படுதலுண்மையாகவின், அறிவினின்று முலகுதோற்றி, அதினின்றுந்தேகம் நிகழ்கின்றது) எனவோருண்மைகண்டு கூறினார். அன்றியும், அவர் அறிவு=தெரிந்துகொள்ளுந் தன்மையது அல்லதுசித்தெனவும், உலகம்=தெரிந்துகொள்ளாத் தன்மையது அல்லது ஜடம் எனவும்கூறினார். இவற்றுள் ஒன்றுகாரணமும், மற்றொன்றுகாரியமுமா மெனவுங் கூறினார். இனி இவற்றை விசாரித்து எமதுண்மையை நிறுத்துவாம்.

நமதுதோழர் அறிவு,உலகம் எனவிரண்டுசொற்களைப் பிரயோகித்துவிட்டு இரண்டுமொன்றேயென்பதும், அவற்றுள் ஒன்று தெரிந்துகொள்ளுந்தன்மையது, மற்றொன்று தெரிந்துகொள்ளாத்தன்மையது என்றதும் அவருக்கே நகைப்பை விளைக்கும். பூ, மலர் என்பனபோல அறிவு உலகம் என்பவைகளைக் கொண்டாலோவெனின், பூ என்பதோர் பொருளும், மலரென்பதோர் பொருளுமாகி இரண்டற்குந் தனித்தனித் தன்மை வேறுபட்டதில்லை. அறிவு உலகம் என்பவைகள் தனித்தனி வேறு வேறு பொருள்களாகி அறிவு ஒருதன்மையும், உலகம் ஒரு தன்மையும் பெற்று விளங்கலால் இரண்டும் ஒருபொருளென்பதுகூடாது. அறிவு ஒருமுதலும், உலகம் ஒருமுதலுமாகி அறிவே உலகம் என்பதழிந்து நம்மவரது மதம் நிலைதளர்ந்திடும். தெரிந்துகொள்ளுந் தன்மையினதாகிய அறிவையும், தெரிந்துகொள்ளாத் தன்மையினதாகிய உலகையும் ஒன்றென்னல் பெருஞ் சிரிப்பையே விளைக்கின்றது. இது மனுஷ்யனையும் கழுதையையும் ஒன்றாக எண்ணும்புத்திசாலிகளுக்கே அமையும். பொன்னும் பூஷணமுங் காரணகாரியங்களாகி இரண்டுசொற்களா லமையினுமிரண்டுமொன்றேயாதல்போற கொள்ளத் தக்கதெனின், காரணகாரியங்களாக வமைந்தபொன்னும் பூஷண

மூர் தன்மை வேறுபடக்காண்கிலேம். பொன்னெனப்படுதோர் பொருளும்,பூஷணமென்பது அதன் திரிவுமாம். திரியாதபோதும், திரிந்தபோதும் பொருள் ஒருதன்மையா யிருக்கக்கண்டோம். அறிவு ஓர்பொருளும், உலகம் அதன்திரிவுமாயின், அது திரியாதபோதுந் திரிந்தபோதும் ஒரே தன்மையாயிருத்தல் வேண்டும். அங்ஙனமின்றி அவைகள்முறையே அறியுந்தன்மையையும், அறியாத்தன்மையையும் பெறலாலிரண்டு மொரு பொருளென்றது ஏற்றம்பெறாது.அன்றியும்,அறிவாகிய காரணத்தினின்றும் உலகமாகியகாரியம்பிறந்த தென்பது மானிடஜன்மத்திலிருந்து கழுதைபிறந்தது என்னும் விவேகிகள் கழகத்துக்கே ஒப்பாகும். இப்படி யழிதலால் அறிவே உலகு என்பவரது மதம் அநாதரணியமாயிற்று. இனிஉலகமும்,அறிவும் ஒன்றென்பதற்கும், உலகமாகியகாரணத்தினின்றே அறிவாகிய காரியம் பிறந்தது என்பதற்கும் மேல் யாம் காட்டிய வுபமானங்களைத் திருப்பிக் கழுதையும் மனுஷ்யனும் ஒன்றெனவும்,கழுதை ஜன்மத்திலிருந்து மனுஷ்யன்பிறந்தான் எனவுங் கூறும் நிதர்சனமே போதுமானதாகையால் உலகமே அறிவு என்பவர் மதமும் அநாதரணிய மாயிற்று. இந்த ஸித்தாந்தியை யாம் பிரஸ்தாபிப்பது அவசியமன்றாயினும், ஸந்தர்ப்பநேர்ந்தமையால் பிரஸ்தாபித்தது குற்றமாகாதென்க. இங்ஙனநிற்க, அறிவுக்குமுதன்மை கூறு மறிஞர் காட்டியசொப்பன திட்டாந்தத்தைக் கொஞ்சந் தொட்டுப்பார்ப்போம்.

இவர் சொப்பனத்தின்கண் அறிவே யுலகாகு மென்றார். சொப்பனமென்பது அறிவு என்னும் பேருடைய ஆன்மா முப்பத்தைந்து கருவிகளைப்பெற்று நுதலின்கட் சாக்கிராவஸ்தை யடைந்திருப்பதுபோல, அந்தமுப்பத்தைந்து கருவிகளில் பத்துக்கருவிகள் குறைந்து இருபத்தைந்து கருவிகளைப்பெற்றுக் கண்டத்தின்கட் டங்கியிருக்குமோரவஸ்தாநிலயமாம். சாக்கிரத்தில்முப்பத்தைந்துகருவிகளோடு கூடியவழி ஆன்மா உலகையறிகின்றது. சொப்பனத்தில் இருபத்தைந்து கருவிகளோடுகூடியவழி அவ்வான்மா உலகையறிகின்றது. கருவிகளோடு கூடாதவழி ஆன்மாத் தானே உலகையறிந்திலது. ஆன்மாத் தனித்துநிற்பதொரு பொருளுமன்று. ஆன்மாத் தனித்துநின்றமைக்கும், அங்ஙனந்தனித்து நின்றே அது உலகாயினமைக்கும் தக்கவுபமானங் காட்டி அறிவே உலகம் என்னும் ஸித்தாந்தத்தைப் பூர்வபட்சியார் சாதித்துக்கொள்ளக்கடவர். தேகவியாபாரமின்றி அறிவுதனித்து நின்று உலகுஅதனிடத்திற் காணப்படுமெனின் அறிவே உலகு என்னும் ஸித்தாந்தம் கனம்பெறும். தனுவாதிகளைத் துணைக்கோடலாலாணவத்தான் மூடப்பெற்றவறிவு சிறிது விளங்கப்பெற்றுத் தனக்கெனவோர் சுதந்தரமின்றிவாழும் மலினவறிவாகிய பசுவையே சுத்தவறிவாகிய பதியென மயங்கியும், சுத்த அறிவாகிய வந்தப்பதியினிடத்தில் மலினமாகிய மலமாயாதி தோஷங்களைக் கற்பித்தும் அறிவே உலகு என்று சாதிப்பது ஸர்வாஸங்கதமென்க. இவ்வுண்மைதேராது (அறிவினின்று முலகுதோற்றி, அதினின்றுந் தேகம் நிகழ்கின்றது) என்றது முதலிய வெறுஞ் சொற்களையடுக்கி நம்மவர் அவலராயினர். நமது பூர்வபட்சியார் அறிவினிடத்தில் உலகு காரியப்படுதலைச் சாதித்தற்குச் சாக்கிரத்தைத்தள்ளிச் சொப்பனத்தை யெடுத்துக்கொண்டார். இதனால் ஜாக்கிரம் தமக்குப் பிரதிகூலமும், சொப்பனம் தமக்கு அநுகூலமுமாகத் துணிந்தாராக ஏற்படுகின்றது. எம்முடைய பிரவசனத்தால் அவரெடுத்துக்கொண்ட சொப்பனமும் அவரைக்கைவிட்ட நியாயம் புலப்பட்ட

மையால், இனி அந்தச் சொப்பனத்தையும் அவர் கைவிடவேண்டியவரே யாயினர். அன்றியும் அவரது ஸித்தாந்தத்தில் உலகத்தை மித்தையென்று நாட்டுமவஸரத்தில் சொப்பனதிருட்டாந்தத்தைக்காட்டிச்சொப்பனம் பொய் யானவாறு உலகம் பொய்யென்று சாதிப்பதுண்டாகையால், அத்தகைய சொப்பனத்தை அறிவினிடத்தி லுலகம் காரியப்பட்டதென்பதற்கு அவர் ஓராதரவாகத் தேடியதும் பிரதிகூலமேயாம். அவருக்கு ஸ்வப்நம்பொய்யா கையால் அறிவினிடத்தில் உலகம் காரியப்பட்டது பொய்யாகி,அறிவே உல கம் என்று அவர் சாதித்ததும் பொய்யாகமுடிந்தது. அதற்காக அவரெடுத் துக்கொண்ட பிரயாசமும் அவலமாயிற்று. அறிவே உலகம் என்புழி அறிவு எப்படிமெய்யோ அப்படி உலகமும் மெய்யாகின்றது. உலகம் மெய்ப்பொரு ளின்றிரிவு அல்லது விகாரம் என வெளியாயினபின்னர் அவ்வுலகத்தை மிச் சையெனக் கூறி வேறுதிருஷ்டாந்தங்களாற் கலங்குதல் வீணேயேயாம். மெ ய்ப்பொருளும், பொய்ப்பொருளுமாகச் சாதித்தற்கு ஓர் பொருளிடங்கொடு க்கமாட்டாதாகையால், நம்மவரது ஸித்தாந்தம் ஒன்றிலொன்று விரோத மான பலஹேயதிருஷ்டாந்தங்களை யுடன்கொண்டு ஜீவித்தால் அதனது கௌரவ மிருந்தவாறென்றறிக. எடுத்துக்கொண்ட பிரமேயத்தைப் பத்திரி கைதோறுங் கொஞ்சங் கொஞ்சமாக விளக்கி முடிவுசெய்து பிரம்ஹவித்யா விலடங்கிய(**உலகம்சத்தா அசத்தா**) என்பதுமுதலிய ஏனையவிஷயங்களையுங் கொஞ்சம் விசாரிக்க ஆசைகொண்டிருக்கின்றோம்.

(இந்துஜனபூஷணி 1888ஹு மேமீ 19உ)

**அத்வைதி.**

## அறிவோ உலகம்?

அறிவே உலகம்என்று சாதிப்பான்றொடங்கிய நமது நண்பர் "ஏகமான சூரியன் கண்ணாடியிற் பிரதிபலித்துப் பிரகாசத்தைத் தருஞான்று பிரதிபலன ப்பிரகாசம் கண்ணாடியினின்று தோற்றினும், உண்மையில் சூரியனிலிருந்தே தோற்றுகின்றது. அங்ஙனமே சொப்பனவுலகிற்கு முதன்மையான அறிவு சொப்பனசரீரத்தின்கண் பிரதிபலித்து அச்சரீரத்திற்கபேதமாய்த் தோன்றி னும் உண்மையில்வேறு" என்று பிரகாசப்படுத்தினர். இந்த வுபமானம் அவரதுமதத்தை யழிப்பதொன்றே யொழிய நிறுத்துவ தொன்றன்று. எங் ஙனமெனின், நம்மவர் அறிவு-சொப்பன வுலகமென்பவைகளை முன்னர்ப்பிர ஸ்தாபித்தபோது அறிவே சொப்பன வுலகமாயிற்றெனவும், அறிவுகாரண மும் சொப்பனவுலகு காரியமுமா மெனவுங்கூறியிருக்கின்றனர். இப்போது அதனை நிலைப்பிப்பதற்கு எடுத்துக்கொண்டசூரியன், கண்ணாடியென்பவை கள் அதனோடுபொருந்துமாறெங்ஙன்? சூரியனே கண்ணாடியாகியும், சூரியன் காரணமும், கண்ணாடிகாரியமுமாகிய நிலைபெறினன்றோ எடுத்துக்கொண்ட பிரமேயம் சிதைவுறாது? சூரியன்வேறு, கண்ணாடிவேறு எனவும், சூரியனிற் கண்ணாடி காரியப்பட்டதில்லையெனவும் இனிதுவிளங்கலால், அறிவுவேறு, சொப்பனவுலகுவேறு எனவும், அறிவினிடத்திற்சொப்பனவுலகு காரியப் பட்டதில்லை யெனவு நிச்சயிக்கப்பட்டு (அறிவே உலகம்) என்று சாதித்த அவரது ஸித்தாந்தம் அவல ஸித்தாந்தமாயிற்று. அன்றியும், அவர் "சொப் பனவுலகிற்கு முதன்மையான அறிவு" எனவும், "சொப்பன சரீரத்தின்கண்

(அறிவு) பிரதிபலித்து'' எனவுங்கூறியதும் பிழையாம். எங்ஙனமெனின்
அவரபிமதப்படி அறிவையன்றிச்சொப்பனவுலகும், அதினிகழுஞ் சொப்ப
சரீரமும் இல்லை. அதனால், அறிவுக்குஞ் சொப்பன சரீரத்திற்கும் பேதமின்
றாகி, அறிவேசொப்பன சரீரம்என்று ஏற்படுகின்றது. அறிவேசொப்பனசரீ
மாகுகையில், சொப்பன சரீரமாகியதன்னில், அறிவாகியதான் பிரதிபலி
தலைத் தானாகாத கண்ணாடியில் சூரியனாகியதான் பிரதிபலித்ததனோடு ஸா
யங்கூறியது பொருந்தாதென்க. அன்றியும் "உண்மையில்வேறு" என்று
அவர் சொப்பன சரீரத்திலான்மாவைப் பிரித்தோதியதுந் தவறுடைத்தென்
க. நமது பூர்வபட்சியார் தாபிக்கவெழுந்தது (அறிவே உலகு) என்னு
தமது மதமும், தாபித்தது (அறிவு உலகன்று) என்னும் எமது மதமுமா
முடிந்தது. அவரெடுத்துக்கொண்ட திருட்டாந்தங்கள் அறிவேவுலகம் என்
று சாதிக்க இடங்கொடாமல் அறிவு உலகன்றென்பதையே ருசுப்படுத்து
கின்றன. இவ்வாறு வழுவுதல் அவரதுமதத்திலுண்டான வழுவேயன்றி
அவரது புத்தியிலுண்டான வழுவென யாம் கூறுகிலேம்.

இன்னும் அவரது பிரஸங்கத்திலுண்டாகிய தோஷத்தைக்காட்டுவோம்.
சூரியன்கண்ணாடியிற் பிரதிபலித்துப் பிரகாசிக்கையில், பிரதிபலனப் பிரகா
சம் கண்ணாடியினின்று தோன்றினும், உண்மையில் சூரியனிலிருந்தே தோன்
றுகிறது என்று வரைந்தாரன்றோ? இதனால் நமது தோழருக்குண்டாகிய
ஸாதகம் இன்னதென்று எமக்குப் புலப்படவில்லை. அறிவு சொப்பனவுல
மாகி, அதில் நிகழுஞ் சொப்பனசரீரத்தில் அதுபுகுந்து விளையாடு முண்மை
க்கு நம்மவர்தேடிய வுபமானம் அதுவாகையால், அவையொன்றோடொன்று
பொருந்தாமையைக் கண்டிரங்கியே யாமவ்வாறுகூறினோம். எங்ஙனமெ
னின், சொப்பனவுலகமானதும், சொப்பன சரீரத்தினுழைந்ததும் அறி
வேயன்றி அறிவினது பிரகாசமன்று. கண்ணாடியினுழைந்தது சூரியனே
முதலாகாமல் அவனது பிரகாசமாக முடிந்தது. இதனால், உபமானவிருத்
முண்டாயினதன்றியும், அந்தக்கண்ணாடியில் சூரியன் பிரதிபலித்தபோ
பிரகாசத்தை வெளியேகண்டதன்றி, ஒரு செங்கற்பலகையில் சூரியன் பிர
பலித்தலும், அதினின்று பிரகாசமெழுதலுங் காணக்கூடாமையால், கண்
ணாடியைத் தள்ளிச் சூரியனேபிரகாசம் வெளியானதற்குக் காரணம் என்
வரைந்துகொண்டது தவறாகமுடிந்தது. சூரியனது பிரகாசம் வெளியான
தற்கு அந்தச் சூரியனேயன்றி அவன் பிரதிபலித்தகண்ணாடியாகிய நிர்மல
வஸ்துவுங் காரணமாய் நின்றமையால், நம்மவரது நியாயம் நிலைபெறு
தொழிந்தது. இந்த வுபமானபங்க ஸமர்த்தனத்தால் அவரது உபமேய
அழியத் தட்டில்லையாகையால், இதனையும் நமது அன்பர் கனிந்து பார்த்து
ஸந்தோஷிப்பாராக. இதனால், (அறிவே உலகு) என்பது அஸத்தாயினமை
யறிக.

(இந்துஜனபூஷணி. 1888௵ மேயீ 26௳)

அந்தைவதி.

## அறிவோ உலகம்?

---

இனி நமதுநண்பர் நூலையன்றி ஆடையின்மைபோல அறிவையன்றிச்
சொப்பனவுலகில்லையெனவும், ஆடையில் நூல்நிறைவுபோலச் சொப்பனவ

கில் அறிவுநிறைவு எனவும், சொன்மாத்திரமும் தோற்றன் மாத்திரமுமே யன்றிப் பொருண்மாத்திரமாகச் சொப்பனவுலகில்லை யெனவும், உள்ளது அறிவேயெனவுஞ் சாதித்தார். சொப்பனவுலகு அறிவினின்று வந்ததென வும், அறிவே சொப்பனவுலகு எனவும் முன்னர்க்கூறியதற்கு மாறாக அந்தச் சொப்பனவுலகைச் சொன்மாத்திரமும், தோற்றன் மாத்திரமுமாகக் கூறியது யாங்ஙனம்? சொன்மாத்திரமென்பது முயற்கோடுபோல்வது. தோற்றன் மாத்திரமென்பது கானற்சலம் போல்வது. இவற்றுள் முயற்கோடு திருஷ்டிக்குவிஷயமாகாததும், சுகதுக்கானுபவமாகாததும், வேறொன்றிலே நின்றுங் காரியப்படாததுமாம். சொப்பனவுலகம் சூக்ஷ்ம தநுவில் திருஷ்டிக்கு விஷயமானதும், சுகதுக்கானுபவமானதும், அவர்மதப்படி அறிவிலேநின்றுங் காரியப்பட்டதுமாம். இவ்வுபமான வுபமேயங்கள் எங்ஙனேபொருந்தும்? இனித் தோற்றன்மாத்திரமாகிய கானற்சலம் சுகதுக்கானுபவமாகாதது. சொப்பன வுலகம் அதுபோல்வதன்று. சுகதுக்கானுபவமாயுள்ளது. இவ்வுபமான வுபமேயங்களும் நிலைபெறுமாறெங்ஙனம்? பூர்வபட்சியாரெடுத்துக்கொண்ட இரண்டுபமானங்களும் அவரது உபயோகத்தைச் சாதிக்கவலியில்லாதனவா யின. அன்றியும், அவரெடுத்துக்கொண்ட வுபமானங்களில், சொன்மாத் திரமாகிய முயற்கோடு ஒருதன்மையதும், தோற்றன் மாத்திரமாகிய கானற் சலம் மற்றொருதன்மையது மாகின்றமையால், ஒன்றிலேயொன்று மாறு பட்ட அவ்விரண்டுபமானங்களையும் அவ்விருதன்மைகளையு மெய்தாத சொப் பனவுலகமாகிய வொருபொருளினிடத்திலே ஸமர்த்தித்ததும் பெருஞ்சிரிப் பையே விளைக்கின்றது. இப்படி விசாரித்தறிந்தபேர்கள் நூலிலேயுண்டா கிய ஆடையைச் சொன்மாத்திரமும், தோற்றன் மாத்திரமுமாக அவர்கிர கித்து, அதனையுபமானமாக வெடுத்துக்கொண்டு சொப்பனவுலகைச்சோதிக்க வந்தது தெரியாமையென்றே கூறுவார்கள். இதுநிற்க,

நம்மவரெடுத்துக்கொண்டநூல், ஆடைஎன்பவைகளில் நூல் ஓர்காலத்தி லும் ஆடை ஓர்காலத்திலும் வியக்தம். நூலாயிருந்தபோது ஆடைஎன்னும் பேரில்லை. ஆடையாயுள்ளபோது நூல்என்னும் பேரில்லை. நூல்ஆடையா கத் திரிந்தும் ஆடைநூலிலேநின்றுவெளிவந்ததும் பிரிவறநிற்றலால் நூலை யும், ஆடையையும் தனித்தனி இரண்டுகாலங்களிலன்றி ஒரேகாலத்தில்கவர் ந்திடுதல் கூடாது. இந்தவுபானஸாத்ருஸப்படி அறிவு சொப்பனவுலகு என் பவைகளில் அறிவு ஓர்காலத்திலும், சொப்பனவுலகு ஓர்காலத்திலும் வியக் தமாகவேண்டும். அறிவாயிருந்தபோது சொப்பனவுலகுஎன்னும் பேரில்லை. சொப்பனவுலகாயிருந்தபோது அறிவுஎன்னும் பேரில்லை. அறிவு சொப்பன வுலகாகத்திரிந்தும், சொப்பனவுலகு அறிவிலேநின்று வெளிவந்தும் பிரிவற நிற்றலால் அறிவையும், சொப்பன வுலகையும் தனித்தனி இரண்டுகாலங் களிலன்றி ஒரேகாலத்திற் கண்டிடுதல் கூடாது. நம்மவரது உபமானத்தை த யநுஸரித்தே யாமிவ்வாறுவிசாரித்தோம். இங்ஙனமாக ஆடையையும், சொப் பன வுலகையும் சொன்மாத்திரமும், தோற்றன்மாத்திரமுமாகவுள்ளனவென் று நமதுதோழர் கூறியது எந்தஅறிவுகொண்டோ அறியேம். சொன்மாத் திரம், தோற்றன்மாத்திரம் என்பவைகட்கு யாம் விளக்கிக்காட்டிய முயற் கோடு கானற்சலம் என்பவைகள் விஷயமாயின. நூல், ஆடைஎன்பவைகள் விஷயமாகவில்லை. நம்மவர் அவைகளை எவ்வாறு விஷயமாக விளக்கிக்காட்டு வாரோ அறியேம். எமது பிரவசனத்தால் பூர்வபட்சியார் எடுத்துக்கொண்ட

வுபமான வுபமேயங்கள் சொன்மாத்திரமும், தோற்றன் மாத்திரமுமாகா தொழிந்தமையால், சொப்பன வுலகைச் சூனியமென்ருெழித்து (உள்ளது அறிவே) என்று சாதித்த அவரது ஸித்தாந்தம் புன்மையடைந்துபோயிற்று. (அறிவே உலகம்) என்பது அழிந்தபடி (உள்ளது அறிவே) என்பதும் அழிந் தமையால் இனி அவர் கூறும் ஏனைய புதுமைகளையும் விசாரித்திடுவோம்.

(இந்துஜனபூஷணி. 1888ஞு ஜூன்மீ 2௳)

அத்வைதி.

## அறிவோ உலகம்?

---

நமதுதோழர் கயிற்றை மயக்கத்தால் அரவெனக் காணும்போது அரவா கவும், தெளியும்போது கயிருகவுங் காணப்படுவதுபோல் அறிவை மயக்கத் தால் உலகாகக் காணும்போது உலகாகவும், தெளியும்போது அறிவாகவுங் காணப்படுதலின், அறிவே சொப்பனவுலகாதல்போல் சாக்கிரவுலகுமாமென வும் அங்ஙனமாயினும் கயிற்றினிடத் தரவுதோற்றலும், நிகழ்தலும், அழிவு பாடெய்தலு மின்றெனத் துணியப்படுதல்போல அறிவுகருதியவண்ணங் கா ணப்பட்டதேயன்றி அதனிடத் துலகு தோன்றிநின்றழிந்ததில்லையெனவும், அரவுதோன்றியதும் அறிவினிடத்தேயாகலின் அரவுக்கு முதற்காரணம் அறி வேயாகுமெனவும் பிரஸங்கித்தனர். இதனையும் விசாரிப்பாம். நம்மவருக்குக் கயிறும், அரவும் உபமானப்பொருள்களும், அறிவும் உலகும் உபமேயப்பொ ருள்களுமாகி நிலைத்தன. கயிறும் அரவும் ஸத்தியமானவாறு அறிவும் உலகும் ஸத்தியமாகும். கயிற்றில் அரவு ஸத்தியமாகாததுபோல அறிவில்உலகு ஸத் தியமானதில்லையெனின்,கயிற்றினிடத்தில் அரவை அஸத்தியமாகக்கண்டது கயிரு? அல்லது அரவா? இரண்டுமல்லவாகி அவ்விரண்டற்கும் வேருகிய தொருபொருளென்பது நிச்சயம். இவ்வுபமேய நிதரிசனத்தால் அறிவில் உல கை அஸத்தியமாகக்கண்டது அறிவும், உலகுமல்லவாகி அவ்விரண்டிற்கும் வேருயதொரு பொருளாதலமையும். அஃது யாது? அறிவுக்குவேருய், ஜட மாய்க் காணப்படும் உலகையே இன்மைப்பொருளாக்கவந்த நம்மவருக்கு அ றிவும், உலகுமன்றி மூன்ருவதொருபொருண் முளைத்தது அவரது அதிர்ஷ்ட மேயாம். அறிவே ஸத்தியம், உலகு மிச்சையெனத் தாபித்தற்குக் கயிற்றரவு நியாயம் பிரதிகூலமென்க. கயிறு தன்னை அரவாகமயங்கின், அறிவு தன்னை உலகமாக மயங்கும். அஃதின்மையின் அறிவு மங்கியதின்மையறிக. அறிவு என்று ஓர் பொருளுக்குப் பேரிட்டுவிட்டு, அதனிடத்தில் அறியாமையை யேற்றி, அது மயங்கியதென்றிடல் யாங்ஙனம்? அது மயங்குமாயின் அதனை அறிவென்றிடல் யாங்ஙனம்? கயிற்றில் அரவைக் கண்டபொருள் அவ்விர ண்டற்கும்வேருய தோர்புருடனேயன்றே? அவன் யாவனெனவிசாரிக்கின், அறிவாகிய பிரமம் தனதுநிலைகெட்டு அறிவறியாமையோடு கூடிய ஜீவனுய் நின்ற கற்பிதப்பொருளேயாகையால், அவரது மதம் கேவலம் விரோதமா யு ள்ளதென்க. காரணவறிவு நிர்மலமும், காரியவறிவு கல்மஷமுமாயிடுதல் யாங் ஙனம்? அறிவுக்கன்னியமில்லாதபோது கல்மஷம் அதற்கெப்படிவந்தது? கல்மஷமின்றெனின் ஜீவசப்தம் ஏன்பிறந்தது? அதுவுமின்றெனின் கயிற் றை அரவாக மயங்கினுன் என்றது யாரை? அதுவும் பொய்யெனின் உள்ள மெய்தான் யாது? அறிவொன்றுள்ளதுதான் மெய்யெனின் இங்ஙனங் கூறு

வதுமாத்திரம் மெய்யாதல் யாங்ஙனம்? சிதாபாஸனுகிய இல்லாத ஜீவனது பிரவர்த்தகம் அந்த ஜீவனைப்போல் இல்லாததேயாகையால், அவர்கூறிய (அறிவொன்றேயுள்ளது) என்பதும் இல்லாததேயாகும். எல்லாமில்லாததா ய்ப்போகின்ற அவரது ஸித்தாந்தம் சூனியசித்தாந்தமென்க. அன்றியும் முந் திய பிரமவறிவு தன்னை யுலகமாகவும், ஜீவனுகவும் மயங்கியது. பிந்திய ஜீவ அறிவு கயிற்றை அரவாக மயங்கியது. இவை மயக்கநிலையிலேயே கிடத்தலா ல் இந்தஸித்தாந்தம் (முற்றுமையநிலைபெற்று நின்மலமிலாததால்) என்றபடி பிரமை ஸித்தாந்தமாகவும் வியக்தமாகின்றது.

இனி நம்மவரது உபமான உபமேயங்களில் கயிறு அறிவுக்கும், அரவு உ லகுக்கும் பொருந்தின. கயிறு ஜடம், இந்த வுபமானத்தை அறிவாகிய பிரம த்தோடொன்றக்கூறினர். அரவு சித்து, இதனைக் கொண்டுபோய் அசித்தா கிய உலகத்தோடொன்றக் கூறினர். உபமானப்பொருளும், உபமேயப்பொ ருளும் பொதுத்தன்மையால் தம்மிலொருவாறு ஒக்கினும், சிறப்புத்தன்மை யால் ஒன்றினென்று வேறாகி இரண்டுமுதலாதல் ஸர்வஸம்மதம். இங்ஙனமா கவும் உபமானமே உபமேயம், உபமேயமே உபமானம் என விரண்டையு மொருமுதலாகக்கொண்டு அறிவே கயிறு, கயிறே அறிவு எனத் திரிபுணர்ச் சியான் மயங்கித் (தமதுகொள்கையின்படி உபமானப் பொருளாகிய கயிற்றி னிடத்தில் அரவுதோற்றினும், உபமேயப்பொருளாகிய அறிவினிடத்து அவ் வரவுதோன்றியதாகவேகொண்டு) அரவுக்கு முதற்காரணம் அறிவேயெனச் சாதித்தல் யாங்ஙனம்? அறிவே கயிறு, கயிறே அறிவு என்னுமதுகொண்டு தாம் முன் சித்தென்று சொல்லிய அறிவை ஜடமென்றுசொல்லவருந்தோஷ த்துக்கு அவர்தேடும் பரிகாரம் யாது? அவரது வார்த்தைகள்யாவும் பரிகாஸ த்துக்கே இடஞ்செய்தலால் அஸத்காரியவாதியாகிய அவரதுபிரஸங்கம் நிஸ் ப்ருஹமென்க. அவர் கயிற்றரவு திருட்டாந்தத்தால் (அறிவே உலகம்) என் று சாதித்தலும், சொப்பன வுலகைப்போலச் சாக்கிரவுலகும் அறிவேயென்று தாபித்தலும் வெறுஞ் சொல்லேயன்றிச் சாதித்தபாடும், தாபித்தபாடுமில்லை. இந்த வியவஸ்தையால், அறிவு உலகன்றெனத் துணியப்பட்டுப் பூர்வபட்சியா ரது மதம் நிரஸ்தமாயிற்று.

இனி, நம்மவர் (விசாரித்தற்கு முன்னர் உள்ளதாகத் தோன்றியகடம் வி சாரித்துத் தெளிந்தபோது இல்லதாக முடிதலின், கடம் தோற்றலும், நிகழ் தலும், அழிவுபாடெய்தலும் அறிவினிடத்தன்றி மண்ணினிடத்திலல்லவாக லின், அறிவே கடமாம்) என்றனர். ஒருவ னொருபதார்த்தத்தைவிசாரித்து இல்லையென்று வாயாற்சொல்லிவிடுவதினலேயே அது இல்லாமற்போய்விட மாட்டாது. ஒருபதார்த்தமிருந்ததனுல், அதனை விசாரிக்கவந்ததே யன்றி அது இல்லையாயின் விசாரிக்கவேண்டியதின்றாம். இல்லாதபதார்த்தம் உள்ள துபோற்றோன்ற வதனையே விசாரித்து இல்லதாகத் தெளிந்ததெனின் இல் லாதது உள்ளதாகத் தோன்றியதற்கு ஓரேதுவேண்டுமாகலின், அவ்வேது யாது? ஏதுவின்றி முன்னில்லாதது தோன்றமாட்டாதாகையால் முன்னி ருந்ததே தோன்றியதெனல் ஸித்தம். இதனுல் விசாரித்தற்குமுன்ன ருள் ளதாகத் தோன்றியகடம் விசாரித்துத் தெளிந்தபோது இல்லாததாய்விட்ட து என்று ஸந்தோஷித்தது ஸந்தோஷமாகாது. உள்ளதை இல்லாததாக வி சாரித்தது விபரீதமேயாம். உள்ளதை இல்லதாகவும், இல்லதை உள்ளதாக

வுந் தெளிதல் யாங்ஙனம்? கடம் ஜடம், அறிவு சித்து. ஜடம் சித்தில் யாங்ஙனமுதிக்கும்? சித்திலே சித்தன்றிக் கடமுதியாதாகையால், அறிவிலேதானே கடமுதித்தது என்னு மஸங்கதம் அடிபட்டுப்போய்விட்டது. இதனால் கடமுதித்தது மண்ணினிடத்தென்றே வியக்தமாயிற்று. அவரதுகொள்கையின்படி அறிவே கடமாயின், கடமில்லாததாய்விடுகிறபடி அதற்கு மூலமாகிய அறிவுமில்லாததாய்விடும். இல்லாததிலில்லாதது பிறக்குமேயன்றி உள்ளதிலில்லது பிறவாது. அறிவு உள்ளது என்பாரெனின் அதிற்றோன்றியகடமுமுள்ளதாகும். கடத்திற்கு அறிவு காரண மென்றவிடத்தும், மண் காரண மென்றவிடத்தும் கடத்திற்கு இன்மையை யொப்ப முடியாமையால் அதனைத் தெரிந்தபோது இல்லாததாகக் கண்டோமென்ற வாதமே நிலையில்லாததாய்விட்டது. மண் ஜடமாகையால் அதிற் காரியமாயுள்ள கடவிகாரத்தை ஜடத்தினின்று நீங்கிய சித்தாயிருப்பதொன்று வெளிப்படுத்தியதென்க. இதனால் கடத்துக்கு மண்ணைப்போல் அறிவுங் காரணமெனல் நிலைத்தது. மண் முதற்காரணமும், அறிவு நிமித்தகாரணமுமாகும். இரண்டுங் காரணங்களாயினமையால் இவ்விரண்டானுங் காரியப்பட்டதொன்றை இல்லாததாக விசாரித்துத் தெளிந்தோமென்றது பரிகசிக்கத்தக்கதேயாயிற்று.

நமதுதோழ ரிவ்வளவிலமையாது (கடம் மண்ணாகியும், மண் அணுவாகி
யும், அணு பரமாணுவாகியும், அப்பரமாணுவானது ஆராய்ச்சியிலின்றாகியுஞ்
சூனியப்பட்டு அறிவே கடமாயிடுதல் யாங்ஙனமோ, அங்ஙனமே பிருதிவிமு
லிய யாவும் இல்லையெனவும், ஆராய்ச்சியில் உலகிலுள்ள பொருள்கள்யாவு
அறிவின் காரியமேயாமெனவும் அதனால் அறிவே உலகெனவும்) கூறினர்.
ண்ணானது அணுவாயும், அணுவானது பரமாணுவாயும் பாகிக்கப்படினும் அ
வ முடிவில்லாமற்போய்விடுதல் அஸங்கதம். கண்ணுக்குக் காணக்கூடா
ல் அதிஸூக்ஷ்மரூபமாயிருக்குமத்தால் அதனை யில்பொருளாகத் துணிதல்
டாது. (உள்ளது போகாது, உள்ளது உள்ளதே) என்னுந் தருக்கத்தால்
ண் சிதைந்து பரமாணுவானவிடத்தும் போகாததும், உள்ளதுமேயாம்.
ல்லதுவாராது, இல்லது இல்லதே) என்னுந் தருக்கப்படி உலகம் இல்லதா
ன் வரமாட்டாது. வந்திருக்கையால் முயற்கோடுபோல் இல்லதாகமாட்டா
து. உலகம் இல்லாததாயின் (இல்லதற்குத் தோற்றமின்மையின்) என்றநியா
யத்துக்கு விரோதமுண்டாம். அவ்வுலகு தோன்றியிருத்தலால் அது ஒடுங்கு
டத்து இல்லாததாய்விடுமெனின் (யாதுயாண்டொடுங்கும், அஃதாண்டுதி
கும்) எனவும், (ஒடுங்கினவிடத்தினின்று மீளவுண்டாம்) எனவும் போந்தத
க்கவுரைகளால் புனருற்பவங்கூறும் வேதாகமங்களும்பொய்ப்பட்டுப்போம்.
நந்த ஸ்ருஷ்டிகளையும், கற்பங்களையு மொப்பிய வைதிகஸித்தாந்தமும் அடி
ட்டுப்போம். (அறிவே உலகம்) என்றது (பாலே தயிர்) என்னும் பரிணாம
மாகவு முடிதலால் அறிவு சிதைந்து உலகமாகித் தயிருக்கே இருப்புக்கூறுதல்
போல உலகத்திற்கே இருப்புகூறி, அவ்வுலகம் ஜடமாகின்றமையானும், அவர்
சித்தாந்தப்படி சூனியமாகின்றமையானும் (அறிவொன்றேயுள்ளது) என்னு
மவரதுமதம் அநாதரணீயமாகும். (அறிவே உலகம்) என்றதும் பித்துரையாக
முடியும். எடுத்துக்கொண்ட பிரமேயத்தை யொருவாறு விசாரித்து முடிவு
செய்து விசிராந்தியடைந்தோம்.

(இந்துஜனபூஷணி. 1888௵ ஜுன் ௴ 9௳)

அத்வைதி.

# சொப்பனம் சத்தியமென்பதை மறுத்து, அறிவே உலகமென வுரைத்தல்.

---

1888௵ பிப்ரவரி௴ ௨௯௳ பிரசுரமான ப்ரம்மவித்தியாவின்கண் "அறிவேஉலகம்" (திருக்கே திருசியம்) என்னும் விஷய மொன்று சுருக்கி வரைந்தாம். இந்துஜனபூஷணி பத்திராசிரியர் அதனை 1888௵ ஏப்ரல்௴ 7௳ வெளியான தமது பத்திரிகையின்கண் பொறித்துவிளக்கினார். 1888௵ மே௴ 19௳ 26௳ ஜுன்௴ 2௳ 9௳யில் பிரசுரமானஷை பத்திரிகைகளின்வாயிலாகவே "அத்வைதி" எனப்பெயர்புனைந்த பிரதிவாதியாரொருவர் "அறிவோஉலகம்?" என்னுமுடிப்பெயர்சூட்டி யாம் கூறியதை மறுத்தார். அதனைப் பூர்வபக்ஷம் செய்யக்கருதி "சொப்பனம் சத்தியமென்பதைமறுத்து, அறிவே உலகமெனவுரைத்தல்" என்னும்விஷயத்தை யுரைக்கலுற்றாம். இதுவிரிவாயிருக்கின்றதென வெண்ணிச் சிறிதுசிறிதாக வெளியாக்காது இம்முறையேனும் மறுமுறையாயினும் ஓரே பத்திரிகையில் பிரசுரிக்க, ப்ரம்மவித்தியா பத்திராதிபரைப்பன்முறையும் வந்தனம்புரிந்து கேட்டுக்கொள்ளுகின்றோம்.

சாக்கிரவுலகம் எவ்வாறு சத்தியமோ அவ்வாறே சொப்பனவுலகமும் சத்தியமெனப் பிரதிவாதியார் அபிப்பிராயப்படுகின்றார். சாக்கிரவுலகத்தை அறிவு, புறக்கருவிகளான இந்திரியங்கள் வாயிலாக அறிகின்றதெனவும், சொப்பனவுலகை இந்திரியங்கள்வாயிலாகவன்றி நேரேயறிகின்றதெனவும் கூறுகின்றார். ஒரு பொருளை அறிய வேண்டின் இந்திரியங்களின் துணையின்றி அறிதலாகாது. ஆகுமெனின் இப்போது மெய் வாய் கண் மூக்கு செவி இவற்றின் ஞானமின்றி இவ்வுலகையறிதல்வேண்டும். அங்ஙனமின்மையான் அறிவானது சொப்பனவுலகை யிந்திரியங்களின் சகாயமின்றி யறிதலென்பதுகூடாது. சொப்பனவுலகை நேரேயறியுமெனின் அவ்வறிவு பிரமாணமாதலின்றி யமையாமையன்றோ? அஃது பிரமாணமாயின் காண்டல் கருதல் உரைமுதலிய பிரமாணங்களி லொன்றாதல்வேண்டும். காண்டலெனக் கொள்வோமெனின் இந்திரியவாயிலாகவன்றித் தோன்றுமறிவைக்காண்டலெனக் கூறுதல் அமையாது. மானதக்காண்டலெனின் அஃதும் பொருந்தாது; மானதக்காண்டலென்பது ஆன்மாவின் சுகம் துக்கம் அறிவுமுதலிய பலகுணங்களைக் கவருவதேயன்றி மற்றப்படி யல்லவென நியாயநூல் கூறுதலாலென்க. அறிவின் றிரிபே சொப்பனவுலகாதலால் மண்ணைக்காணும் கண், குடத்தையும் காண்பதுபோல் அறிவை யறியுங்கருவியானமனம், அவ்வறிவின்றிரிபான சொப்பனவுலகை யறியுமெனின், குடம் மண்ணின் றிரிபாவதுபோல் சொப்பனவுலகம் அறிவின்றிரிபெனவும், அதை யுவமானமாகக்கொண்ட சாக்கிரவுலகமும் அத்தன்மைத்தெனவும், அதாவது அறிவே சாக்கிர வுலகெனவும் கொள்ளவேண்டிவரும். சுவசம்வேதனப்பிரத்தியக்ஷ மென்றாவது, யோகக்காண்டலென்றாவது கூறுதல் முற்றிலும் பொருந்தாது. ஆதலால் இஃது காண்டலன்றென்றறிக. இனிக் கருதலென்போமெனின் அதற்கு வியாத்தி பக்க தருமவுணர்வு முதலிய பலகாரணங்களின்மையால் கருதலுமாகாது. உரையென் றுரைப்பாமெனின் பிரதிவாதியார் உரையன்றி வேறுஉரை சித்தித்தலிலது. ஆதலால் அதுவும் அமையாது. இப்பிரமாணவிலக்கணங்கள் சற்றேனு மமையப்பெறாத சொப்பன வறிவு, மயக்க மென்றே கூறற்பாலதாமென்க.

சொப்பன வுலகு ஜாக்கிர வுலகைவிட வேறுமெய்யாயின் வேருகவே காணப்படவேண்டும். அவ்வாறின்றி அது ஜாக்கிர வுலகமேயாகவும் ஜாக்கிர வுலகானுபவமாகவும் காணப்படுகின்றமையால் பொருந்தாது. அன்றிச் சென்னையினின்றும் மதுரைக்குப் போவதுபோலும், போவதாய்த் தெரிவதுபோலும் வேறுவேறு பொருளாகவும், வேறுவேறு இடமாகவும் வேறுவேறு அநுபவமாகவுங் காணப்படுதல்வேண்டும். அங்ஙனமின்றி ஜாக்கிரமே சொப்பனமாகக் காணப்படுதல் கண்கூடாம். சாக்கிரம் ஒருமணிநேரம், சொப்பனம்பல நாளாகின்றன. இது சூரிய சந்திர நட்சத்திரங்களின் கதிக்கு முற்றும் விரோதம். ஜாக்கிரத்தில் குழந்தைப்பருவமுதல் 70௵ வரையில் வளர்ந்துவந்ததாகவறியாநின்ருேம். சொப்பனத்திலும் குழந்தைப்பருவமுதல் 70-வயசுவரையில் வளர்ந்துவந்ததாக அனுபவப்படுகின்றது. சொப்பனத்தில்காணும் ஷ அநுபவமுண்மையாமா? அதுமட்டில் ஷ அநுபவம் மயக்கமென்றும் அசத்தியமென்றும் ஒப்புக்கொள்ளாவிடில் வேறுவழியென்ன? சேலத்திலிருந்து மதுரைக்கு 20-வயசில் போவோமாயின் 20-வயசில் போனதாகவே தெரிகின்றது. அங்ஙனமே ஜாக்கிரத்திலிருந்து 20-வயசில் சொப்பனவுலகத்திற்குப் போவோமானல் (அதாவது சொப்பனவஸ்தையைக் காண்போமாயின்) அவ்வாறுதோன்ருது, இளமைப்பருவமுதல் அவ்வவஸ்தையில் வளர்ந்துவந்ததாகவே அநுபவப்படுகின்றது. ஆதலால் சொப்பனம் மனோபிராந்தியேயாம்.

அறிவு, ஜாக்கிர சரீரத்தினின்றும் சொப்பன வுலகைக் காண்கின்றதெனின் ஜாக்கிரவுலகிலேயே சொப்பனவுலகிருத்தல் வேண்டும். ஒருஇடத்திலிரண்டு சத்துப்பொருளிருத்தல் அசம்பவமாம். மனம் இச்சரீரத்தைவிட்டுத்தூரமாய்ச்சென்று சொப்பனவுலகை யுணர்கின்றதெனின் அக்காலத்துமனமிச்சரீரத்திலில்லாது சொப்பனசரீரத்திற்செல்கின்றதாகின்றது. அங்ஙனமாயின் மனத்தினுடன் ஜீவனும்பிராணனும் அச்சரீரத்திற்சென்று இச்சரீரம்பிணமாதல்வேண்டும். நித்திரைபுரியுங்கால் இச்சரீரத்தில் உஷ்ணம், பிராணன், நாடியடித்தல், ரத்தஓட்டமுதலியவிருத்தலாலும், பிணம்போல் அமங்களகரமின்றி மங்களகரமாயிருத்தலினுலும் அஃதுண்மையன்று.

சொப்பனத்தின்கண் திரிசிரபுரத்திற்கு வடக்கு மதுரையிருப்பதாகவும், வடதிசையில் சூரியோதய மானதாகவும், மிருகங்கள்பேசுவதாகவும், நாம்பறப்பதாகவும், நாம் மரித்து நம்மைஎடுத்துப்போவதாகவும் இன்னுமிவைபோன்ற அசம்பவமான பலவற்றையும் பார்க்கின்ருேம். நாம் ஒவ்வொருநாளிலும் பலசொப்பனங்கள் காண்கின்ருேம்; அவற்றில் ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லை. சொப்பனம் சத்தாமாயின் ஒவ்வொருமுறையிலும் காணுமுலகு, வேறுவேறெனவே கொள்ளற்பாலது. அவ்வாறின்றென்பதை நாமறிகின்ருேம். பல்லாயிரங்கோடி ஆத்துமாக்கள் தங்களாயுளில்காணும்சொப்பன வுலகங்கள் இத்தனைகோடியென்றெண்ணுதற்காகா வென்பது திண்ணம். எண்ணிக்கையிலடங்கா அத்தனைகோடி சொப்பனவுலகங்களு மிவ்வொரு உலகிலேயே இருத்தல்வேண்டும்; மனமிச்சரீரத்தினின்றே (சத்தென்றவர் கூறும்) சொப்பன வுலகைக் காண்கின்றதெனப் பிரதிவாதியாருரைத்தலினுலெனக. ஒருசத்துப் பொருளின்கண் பிறிதொரு சத்துப் பொருளே யிருத்தல் அசம்பவமெனின் அளவற்றகோடி சத்துப்பொரு ளிருத்தலாமெனல் யுக்தி அநுபவவிருத்தமேயாம்.

நாமிரண்டு சத்துப்பொருளைக் காண்போமாயின், இதுவேறு, அதுவேறு என்னும் ஞான முண்டாகின்றது. அவ்வண்ணமே ஜாக்கிரவுலகம் சொப்பன வுலகமாகிய விரண்டுஞ்சத்துப்பொருளாயின் இரண்டுந் தனித்தனியே வேறென்னும் ஞான முண்டாகவேண்டும். அவ்வாறின்றி யிதுவே அதுவென்னும் ஞானமுண்மையான், இரண்டுஞ் சத்தெனல் அமையாது. தூரத்துள்ள பொருளைக் கனவின்கண் காணுகின்றோம். அப்பொருளிங்குவந்ததா? அங்குநாம் சென்றோமா? அதுவந்ததெனின், அது இங்குவருங்கால் இவ்வுலகுசென்றதி யாங்ஙனம்? யாம்சென்றோமெனின் இந்தத்தேகம் பிணமாதல்வேண்டும். சாக்கிராவஸ்தையின்கண் கடியாரமொன்றை ஒருமாசத்துக்குமுன் வாங்கி வீட்டில்வைத்தோம். சொப்பனத்தும் அக்கடியாரத்தை வீட்டிலிருக்கக் காண்பதனோடு, ஒருமாசத்துக்குமுன் வாங்கினோமென்னும் ஞானமு முண்டாகின்றது. அதனை ஜாக்கிரத்தில் வாங்கினோமேயன்றிச் சொப்பனத்தின்கணல்ல. ஜாக்கிரத்தில் இறந்தபிள்ளை சொப்பனத்தி லுயிருட னிருக்கக் காண்கின்றோம். புத்திரனில்லாவொருவன் புத்திரன் பிறந்ததாகப்பார்க்கின்றான். பித்தம் சந்நிபாததோஷ முதலியவற்றால் நனவும் கனவுமல்லாத வேறு உலகம் தோற்றுகின்றது. நனவில் அதிகவேலைசெய்யின் கனவு காண்பதில்லை; அல்லது விசேஷமாகக் காண்பதில்லை. சில பித்தபதார்த்தங்களைத் தின்போமாயின் விசேஷசொப்பனங் காண்கின்றோம். நித்திரையின் வசம் கனவேயன்றிக் கனவின்வசம் நித்திரையன்று. கனவு இதைப்போன்று வேறுசத்தாயின் அது வேறு மாதிரியா யிருத்தல்வேண்டும்; அவ்வாறில்லை. கனவின்கண் நமதுசிநேகிதனுடன் பேசினதாக காண்போமானால் நனவில் அவன்பேசியதாக ஒப்புக்கொள்ளுகின்றானில்லை.

சொப்பனத்தைவிட்டு நாம் சாக்ரத்திற்கு வந்தபின் அச்சொப்பனவுலகமிருக்கின்றதா? இருக்கின்றதெனில் அங்கு யார் சுகதுக்கங்களை அநுபவிப்பது? இன்றெனின் அந்தந்தக்ஷணத்தில் பல்லாயிரங்கோடி பிரபஞ்சங்கள் சிருஷ்டிக்கப்படல்வேண்டும். நாம் தினந்தோறும்காணும் பல்லாயிரம் சொப்பனவுலகங்கள் பல்லாயிரங்கோடி ஆத்துமாக்களுக்காகச் சிருஷ்டிக்கப்படுகின்றனவா? நம் மொருவர் பொருட்டுச் சிருஷ்டிக்கப்படுகின்றனவா? பல்லாயிரங்கோடி ஆத்துமாக்களுக்கெனின் அவ்வாத்துமாக்க ளெங்கிருந்தனவாகச் சாக்ரத்தில் ஒபபவில்லையாதலின் அஃதுண்மையன்று; நம்மொருவர்நிமித்தம் சிருஷ்டிக்கப்படுகின்றனவெனின் ஒருவர்க்காக க்ஷணத்துக்குக்ஷணம் அளவற்றகோடி யுலகங்கள் சிருஷ்டிக்கப்படுகின்றனவென்பது கூடாது; இந்தச்சாக்கிரவுலகம் அளவற்றகோடி ஆத்துமாக்களுக்காகச் சிருஷ்டிக்கப்படுகின்றமையாலென்க. அளவற்றகோடி ஆன்மாக்களுக் கிவ்வொருஉலகம் சிருஷ்டிக்கப்பட்டதென்பது நியாயமாகுமேயன்றி, ஒவ்வொருவராயுளினும் ஒவ்வொருநாளினும் பலமுறைகாணும் சொப்பனவுலகங்கள் பித்தம் சந்நிபாததோஷமுதலிய காலங்களில் காணுமுலகங்கள் இவைமுதலியவை ஒருவர்பொருட்டுச் சிருஷ்ட்டிக்கப்படுகின்றனவென்று கொள்வதுசரியாமா? சிருட்டிக்கப்படுகின்றனவாகக் கொள்ளினும் சுழுத்தி அவஸ்தையினும் சாக்கிராவஸ்தையினும் மூர்ச்சை சமாதிகாலங்களினும் அவை க்ஷணத்துக்குக்ஷணம் அழிக்கப்படவேண்டுமன்றா? சொப்பனம் மெய்யாயின் அதில் காணப்படும் நமது மித்திரர்களாகவும் சத்துருக்களாகவும் இவ்விருதன்மையரல்லாதவர்களுமான மனிதர் முதலிய சகலஜீவராசிகளு மெய்யாதல் வேண்டும். மெய்யாகுங்கால் நாம் சுக

துக்கங்களில் மொத்துண்டு அவற்றை ஜாக்கிரத்தில் வந்துரைப்பதுபோல் நமது சொப்பனத்தில் காணப்பட்டவர்களும் வந்து கூறல்வேண்டும். கூறு மையால் அவர்கள் அசத்தாகின்றார்கள். இதனால் சொப்பனவுலகம் பிரமை யினாலுண்டானதேயன்றிச் சத்துப்பொருளன் றென்பது திண்ணம். நாம் நாடகங்கள் பார்க்குமிடத்தும், காவியங்களைப் படிக்குமிடத்தும், கேட்குமிட த்தும், எழுதுமிடத்தும், பித்தவிகாரத்தின்கண்ணும், மயக்க வஸ்துவை உட் கொண்டவிடத்தும், சந்நிபாதசுரத்தினும், அபூர்வமான கதைகளைக்கேட்கு மிடத்தும் ஜாக்கிரவுலகை மறந்து அவ்வவ்விஷயங்கள் எதிர் நிற்பனபோல அனுபவியாநின்றனம். அவை மனத்தோற்றமேயன்றி யுண்மையாமா? ஜாக்கி ரத்தில் 50 வயசுள்ள மனிதனைக்கண்டு, நீபிறந்து எத்தனை வருஷங்களாயின என்று வினவில் அவன் 50 வருஷங்களென்பான்; அஃதுண்மையே. சொப் பனத்தில் அவனை வினவில் அங்கும் 50 வயசென்றே விடையளிப்பான். சொப்பனத்தி லளித்தவிடையுண்மையாமா? அப்போதுதான் தோன்றிய வன் 50-வயதென யாங்ஙன முறையாடலமையும்?

காரணமாய நூலும் ஜடம்; காரியமான ஆடையும் ஜடம்; ஆதலால் நூலி னின்றுமாடை தோன்றுவதுநியாயந்தான்; அவ்வாறு சித்தின்கண் சடமான பிரபஞ்சம்தோன்றுவது யாங்ஙனமமையும் எனின் கூறுவாம்: சித்தின்கண் அவ்வாறான சடசத்தி யிருந்தால் தோன்றும். ஜடமான பழுதையின்கண் பாம்பானசித்துத்தோன்றவில்லையா? சடமான கட்டையில் சித்தான மனிதன் தோன்றவில்லையா? அவ்வாறே சித்தினிடத்துச் சடமான வுலகு தோன்று கின்றது. சந்திரனில்லாப் பகற்காலத்தில் ஆகாயத்தில் சந்திரனிருப்பதாக வெண்ணுவோமாயின் அவ்வாறே மனத்துக்கு அது விஷயமாகின்றது. தோற் றப்படும் சடமான சந்திரன் சித்தின்கண் தோன்றியிருந்து மறைகின்றது. விசேஷபித்தங்கொண்ட மனிதனுக்கு வேறு உலகங் காணப்படுகின்றது. அவ்வுலக மறிவினிடமே உதித்ததென்று ஒத்துக்கொள்வோம். அவ்வுலக மோ சடம்; அதன் காரணமான அறிவோசித்து. ஒருமனிதனுக்கு ஓர்வித வியாதிவந்தது; வந்ததுமுதல் அவனுக்குப்பின் ஒரு எருமைமாடு கூட வருவ தாய்த் தோன்றிற்றாம். அதற்குப் பலர் பல அவுஷதங்கள் தந்தும் தீராமல் முடிவில் ஓர் டாக்டர் அவுஷதங்கொடுத்துத் தீர்த்தாரென ஓர் பத்திரிகை சிலவாண்டுகளின் முன்னர் பேசியது. சிலநாட்களின்முன் ஓர் பைத்தியக் காரன் 'தூள்கொடு தூள்கொடு' என்று முன்னிலையில் யாரோ விருப்பதாகக் கேட்பதை நாம்பார்த்தோம். அவனுக்கு எதிரில் மனிதன் தோற்றியே அவ் வாறு கேட்டான். தோற்றிய அம்மனிதனது சரீரமான சடம், சித்தான பித் தன் அறிவினின்றுமே தோன்றிற்றென வுணர்தல்வேண்டும். "ஒரு மனித னுக்குச் சந்நிபாததோஷம் கண்டு பித்தலும் பிதற்றலுமாகப் பேசினானென் றும், அப்போது 'பூச்சி கடிக்கின்றது பூச்சிகடிக்கின்றது' என்றுபயந்து விலகி னானென்றும் நமது சிநேகிதரொருவருரைத்தார். இம்மாதிரி பலவிடங்களி லும் காண்கின்றோம். இது நூதனமல்ல. சடசித்தான பூச்சி, சித்தான அறி வினின்று முதிக்கவில்லையா? பூச்சியின் சரீரமான சடமே யிதில் நாமெடுத்துக் கொள்ளவேண்டிய வுவமானமாம். இதனாற் கூறுவதியாதெனின் சடத்தி னின்றும் சடமுண்டாகலாம்; சித்தினின்றுஞ் சடமுண்டாகலாம். காரணத் தில் எந்தெந்தச்சக்திகளிருக்கின்றனவோ, அந்தந்தச்சக்திகள் வெளிப்படும். சித்தினின்றும் சித்தேயுண்டாகவேண்டுமென்னும் நியமமில்லை, இங்ஙனமே

சித்தினின்றும் சொப்பனப் பிரபஞ்சமான சடம் தோன்றுகின்றது. மனந்திரிந்துஉலகாயிற்றா? திரியாமலாயிற்றா? எனின் திரியாமலேயாயிற்று; கயிற்றினிடம் அரவும் கட்டையின்கண் கள்ளனும்போல.எங்கே யொருபொருளின்கண் மற்றொரு பொருள் விவர்த்தகாரியமாக விளங்குகின்றதோ! அது அசத்தேயாகும். விவர்த்தகாரியம் அசத்தாவதில் அதன்காரணமும் அசத்தாக வேண்டுமென்றுரைப்பது யுக்தி அனுபவங்கட்குவிரோதம். கயிற்றின்கண் விவர்த்தகாரியமாய அரவு பொய்யானால் கயிறும் பொய்யாமோ? சூரியன் கண்ணாடியில் பிரதிபலிப்பதுபோல் அறிவு, சொப்பனசரீரத்திற் பிரதிபலிக்கின்றது என யாமுரைத்ததில் சூரியனும் கண்ணாடியும் பின்னமானமையின் பிரதிபலிக்கக் கூடுமென்றும், அறிவே உலகு என்பதில் அறிவுமுலகும் அபின்னமாயினமையின் பிரதிபலித்தல் அமையாதென்றும், இஃது உவமானதோஷமென்றும் பிரதிவாதியாருரைக்கின்றனர். அதற்குச்சமாதானமுரைப்பாம்: அறிவின்கண் பின்னாசக்தி, அபின்னாசக்தி யென இரண்டுசக்திகளுள்ளன. அவற்றில் பின்னாசக்தியின் காரியம் சேதனாசேதனமான வுலகம்; அபின்னாசக்தியின் காரியம் நமது சரீராதி யிந்திரிய அந்தக்கரணங்களாம். சொப்பனத்தில் அறிவினின்றும் உலகமுண்டாகின்றது; நமது சரீராதி அந்தக்கரணங்களு முண்டாகின்றன. நமது சரீராதி அந்தக்கரணங்கள்தவிர அவ்வுலகிலுள்ள ஏனைய வான்மாக்கள் பின்னாசக்தியின் காரியமாயிருத்தலால் அவ்வான்மாக்கள் அநுபவியாநின்ற சுகதுக்கங்கள், காரணமான அறிவிற்குத் தோன்றுவதில்லை; நமது சரீராதி யந்தக்கரணங்கள் அபின்னாசக்தியின் காரியமாயிருத்தலால் சொப்பனத்தில் நாமெடுக்கும் சரீரங்களுக்குவரும் சுகதுக்கங்கள் அவற்றினுக்குக்காரணமான ஷை அறிவிற்குத் தோன்றுகின்றன. சொப்பனத்திற் காணப்படும் ஏனைய பலசரீரங்கள் பின்னமாகத் தோற்றலின் சூரியன் பின்னமான கண்ணாடியில் பிரதிபலிப்பதுபோல் அறிவும் சரீரத்தில் பிரதிபிம்பிக்கின்றதென்றுரைத்தாம். (சரீரமென்பது சரீரத்தின்கணுள்ள அந்தக்கரணம்) காரணமான அறிவைத்தவிரப்பலசரீரங்களில் காணும் அறிவென்பது வேறில்லையெனற்கு ஒருவாறு பிரதிபிம்பதிருஷ்டாந்தமேயன்றி மற்றப்படியன்று. ஆயினும் அதற்குவிடையுமளித்தாம்.

கயிற்றின்கண் அரவுதோற்ற முண்டாவதுபோல் அறிவினிடத்து உலகம் தோற்றுகின்றதென்பதற்குப் பிரதி வாதியார்செய்யுமாக்ஷேபமாவது:கயிறு, அரவு, அதைக்காணும் புருஷன் ஆகமூன்றிருப்பதுபோல் அறிவினிட முலகு தோற்றுகின்றதென்பதில் அறிவுஸ்தானத்தில் கயிறும், உலகஸ்தானத்தில் அரவும் ஆகவிரண்டேயிருப்பனவன்றி, மூன்று பொருளில்லாமையால் உவமானதோஷமென்பதாம். இதற்குச்சமாதானம்: பரவஸ்துவின்கண் உலகம் தோற்றல்மாத்திரமென்பதற்குக் கயிற்றினிடத்து அரவு உவமானமுரைத்தாம். இது சத்துப்பொருளில் அசத்துப்பொருள் தோற்றல்மாத்திர மென்பதுவரையில் உவமானம். கயிறுஸ்தானத்தில் பரவஸ்துவும், அரவுஸ்தானத்தில் சேதனாசேதனமான வுலகமுமாக வைத்துக்கொண்டால் சங்கைதோன்றாது. சத்தான பரவத்துவின்கண் அசத்தான அல்லது சத்துப்போலியான சேதனாசேதனவுலகம் தோற்றுகின்றதென்பதற்கே கயிறு அரவுதிருஷ்டாந்தம். உவமான மேகதேசமென்பதியாரு மறிந்தவிஷயமே. இதற்கே சொப்பனவத்தையில் காரணமான அறிவின்கண் காரியமான சேதனாசேதனவுலகம் தோற்றுகின்ற தென்னு முவமானமுங் கூறினாம். அறிவுகாரணமும், உலகங் காரியமு

மாயிருப்பனவன்றி அபேதமாயிருக்கின்றமையால் அறிவு பேதப்பட்டு உலகை யறிதல் கூடாதெனச் சங்கைசெய்கின்றார்பிரதிவாதியார். அறிவின் கண்ணுள்ள பின்னாசத்தியின் காரிய மூலகமானமையால் வேறாகவே தோற்றுகின்றது; தோற்றுகின்றமையா லவ்வாறு அறியவும் வருகின்றது. அறிவுக்கும் சத்திக்கும் அபின்னம்; சத்திக்கும் சத்தியின் காரியத்திற்கும் (பின்னமாகத்தோற்றினும்) அபின்னமே. சந்திரனில்லா ஆகாயத்துச் சந்திரபாவனை செய்ய மனத்திற்குச் சந்திரன்தோன்றுகின்றது. அச்சந்திரன் மனத்திற்குப் பேதமாய்த் தோற்றினும் அபேதமேயன்றோ? பித்தனுக்கெதிரில் தோற்றும் பொருள்கள், அப்பித்தனுக்குப்பேதமாய்க் காணப்படினும், பேதமாயுணரினும் அபேதமேயன்றோ ? அங்ஙனமே அறிவிற்குச் சொப்பனவுலகு பேதமாய்த் தோற்றினும் அவ்வாறுணரினும் அபேதமேயாம். எதுபின்னாசத்தியின் காரியமோ அது தோற்றமான அசத்து, அல்லது சத்துப்போலியேயா மன்றியோர்போதும் சத்தாகாதென்றுணர்க.

(ப்ரம்மவித்யா. 1889ஞ ஆகஸ்டீ 31உ)

## சொப்பனம் சத்தியமென்பதை மறுத்து, அறிவே உலகமென வுரைத்தல்.

---

"மண்ணானது அணுவாயும் அணுவானது பரமாணுவாயும் பாகிக்கப்படினும் அவை முடிவிலில்லாமற் போய்விடுதல் அசங்கதம். கண்ணுக்குக் காணக்கூடாமல் அதிசூக்குமமாயிருக்குமத்தால் அதனை யில்பொருளாகத் துணிதல் கூடாது" என்று பிரதிவாதியார் கூறினர். இதனால் உலகை இல் (அசத்து) பொருளெனக் கூடாதென்பதே யவர் சம்மதம். ஆகலின் உலகத்தை நியாய வழியேநின்று காரியகாரண ஏதுவால் கடத்தைவைத்து விவகரிப்பாம்:—

கடமென்பது செய்வதற்கு முன்னுமில்லை; அழிவுபாட்டிற்குப் பின்னுமில்லை; இடையில்மாத்திர முளது. ஆதலால் நடுநின்றகாலத்தில் மாத்திரம் சத்தெனின், முன்னும்பின்னு மில்லாதகடம் இடையில்மாத்திரம் எங்ஙனந் தோன்றும்? "இல்லதுவாராது" என்னும் நியாயத்தால் இல்லது இல்லதேயா மன்றி யோர்போது முள்ளதாகாது. இடைநின்றகாலத்து உள்ளதுதான் எனின், மண்ணாயிருந்தபோது கடமில்லை; (అతఏవనహికశ్చిన్మృదమానయేత్యుక్తే ఘటమానయతి) மண்ணினிடத்து வளைவு குவிவு முதலியகுணங்கடோன்றியபோது கடமென்னும்பெயரை யடைகின்றது. வளைவு குவிவுமுதலியன குணங்களேயன்றிக் குணியாகமாட்டாது. அந்தக்குணங்களும் குணியான மண்ணினிடத்துத்தோன்றி அம்மண்ணினிடத்தே காணப்படுகின்றன. குணி யெப்போதிருக்கின்றதோ, அப்போதே அதற்கொரு குணமுமுளதென்றுணர்க. வளைவு குவிவுமுதலிய குணங்கடோன்றுதற்கு முன்னரும் உருட்சி அல்லது வேறு குணம் உளதென்பதாம். மண்ணாகுணி தன் குணத்தோடெங்கூடியமாத்திரத்தானே அம்மண்ணுக்குக் கடமென்னும் பொருட்பெயர் எவ்வாறுபொருந்தும்? (తస్యచద్రవ్యవాచకత్వం అవశ్యంఅన్యథాఘటో నభోవ్యాహారేత్యాద్యనుపపత్తిః) மண்ணாகுணியும் அதனிடத்துள்ள வளைவுமுதலிய குணங்களுமே யல்லாமல் கடமென்னும் சொல்லுக்குப் பொருள் வேறேயில்லாமையால், மத்தியகாலத்தும்

கடமிலதென்றே கூறத்தகுமென்க. இதனால்கடமென்னும்பொருள்எப்போதுமிலதென்றே துணியப்படும் என்க. கடமானது எக்காலத்தும்இலதாயின்கடமென்னும் தோற்றமு மில்லாமற்போகவேண்டும். கடத்தோற்றம் காணப்படுகின்றமையால் கடமில்லையென்று எவ்வாறுரைக்கப்படுமெனின் தோற்றமெல்லாம் பொருளாகும் வகையில் கயிற்றின்கண்தோன்றும் பாம்பும் மெய்யாகவேண்டும். பாம்பு பொய்யாகத்தோன்றினும் கயிறென் றறிந்தவிடத்துப் பாம்பு தோன்றவில்லை; கடம் அவ்வாறல்ல; மண்ணைத்தவிர எப்போதும் கடமில்லையென்று அறிந்த பின்பும் கடம் தோன்றுகின்றதே எனின், தோற்றமிரண்டுவகை: காரணத்தைக் கண்டபின்னர்க்காரியந்தோன்றாதிருப்பதொன்று; அது கயிற்றின்கண் பாம்பு முதலியன. காரணத்தைக் கண்ட பின்னரும் காரியந்தோன்றுவதொன்று; அது கானல்நீர் முதலியனவாம். கடத்தோற்றம் கானல்நீர் முதலியனபோல்வதாகலின் காரணமானமண்ணே எப்போதும்உளதெனவும், காரியமானகடம் எப்போது மிலதெனவும் ஆராய்ந்து தெளியினும் கடத்தோற்ற மில்லாமற் போவதில்லை. இதுவரையிலும் தோற்றம் பொருளல்லவென் றுரைத்தோமே யன்றித் தோற்றமும் இலதென்றுரைத்தோமல்லேம்.

“இல்லது வாராது, உள்ளது போகாது” என்னும் நியாயத்தால் காரியமில்லையாயினும் காரியம் செய்யாக்கால் இல்லையேயல்லாமல் செய்தால் உள்ளதாகாதோவெனின், செய்பவன் காரணத்தைக் குணவேற்றுமை செய்வதன்றி யில்லாதபொருளை யுண்டாக்கமாட்டான். மண்ணால் இயற்றிய கடம் மீண்டும் மண்ணாயவிடத்து “உள்ளது போகாது” என்னும் நியாயத்தால் கடமில்லாமற்போதல் அமையாது. கடம்போலும் தோற்றின தோற்றம் இல்லாமற்போனதேயன்றிக் கடமான பொருளொன்றிருந்து இல்லாமற் போனதல்ல. ஆகவின் “இல்லது இல்லதே, உள்ளது உள்ளதே” இல்லதை உள்ளதாகச் செய்யவும், உள்ளதை யில்லதாகச் செய்யவும் எவராலும் ஆதலில்லை.

இனி “இல்லதுவாராது” என்பது உண்மையாயினும், இல்லாத கடம் வனைவதற்குமுன் காரண ரூபமாயிருந்து, காரியப்படும்போது வெளிப்பட்டது என்றுரைக்கப்படும் எனின், காரியமானகாலத்தும் மண்ணையன்றிக் கடமென்னும் சொல்லுக்குப் பொருளில்லாமையாலும், காரணமான மண்ணினிடத்தும் கடமில்லாமையாலும் கடமானது இல்லையென்றே கூறத்தகுமென்க. காரியப்பட்ட அவசரத்தும் கடமிருந்தாலன்றோ காரணத்திலிருக்கின்றதென்றாவது உரைக்கலாம்? ஒருவர் மற்றொருவரிடத்துப் பேசிக்கொண்டேயிருந்து சற்றுநேரம் வேறுவேலையிலிருந்து, பின்பு அவரைப் பார்த்தபோது, அவர் காணாமற் போவாரேல், அவர், வீட்டின்கண் அல்லது வேறிடத்தின்கணிருப்பாரென் றனுமானிக்க விடமுண்டன்றோ? முன்னர் அவரைக் கண்டு பேசியிராவிடத்து, அவர் ஷை யிடங்களி லிருப்பாரென்றெவ்வாறு அநுமானிக்கலாம்? அதுபோல் காரியப்பட்ட காலத்துக் கட முள்ளதாகக் கண்டிருப்போமானால் கடமில்லாதபோது காரணமான மண்ணின்கண் அடங்கியிருக்கலாமென அநுமானிக்கத்தகும். அவ்வாறின்மையான் கடமிலதென்றே கூறத்தகும். இதனாலே கடம் மண்ணின்கணிருக்கவுமில்லை, வெளிப்படவு மில்லை யென்றறிக.

இரண்டு பொருள்கள் ஓரிடத்தின் கணிரா. ஒன்று பிறிதொன்றுக்கு மேலாகவேனும், கீழாகவேனும், பக்கமாகவேனு மிருத்தல்வேண்டும். மண், கடம்

ஆகிய இரண்டுபொருள்களுள்ளனவாயின் மண்ணுக்குக் கடம் எப்பக்கத்திலு ள்ளது ? எப்பக்கத்திலேனு முள்ளதாயின் மண்ணுக்குக் கடம் வேருகவே யிருக்கவேண்டும். அவ்வாறில்லை யென்பது கண்கூடு. మృద్ఘటయోర్భేదాభావ సత్వమేవాసత్వేఽన్యద్వ్యపలంభప్రసంగాత్ ஒன்றில் பிறிதொன்றிருப்பதுஒன்று உண்மையும், ஒன்று தோற்றல்மாத்திரமுமாயின் அமையும்; கயிற்றிற் பாம் பும், கானலி னீரும்போல. அங்ஙனமேமண்ணிற் கடம் தோற்றமேயல்லது பொருளில்லையாமென்பது.

மண்ணினிடத்து வளைவு குவிவு முதலிய குணங்களுள்ளனவேயெனின் அவையும் தோற்றமேயாம். அவ்வாறன்றி ஒருமண்ணுயினும் வளையவும் குவி யவும் கண்டோமில்லை. எல்லாமண்ணும் ஒருங்கு சேர்ந்து வளைதல் குவிதலா ன தருமத்தை யடைந்தனவெனின், எல்லாஞ் சேர்ந்துண்டான தருமம் ஒவ் வொன்றினுக்கும் சிறிதுசிறிதாக வேனும் காணப்படவேண்டுமல்லவா? அவ் வாறில்லாமையால் மேற்கூறிய தருமங்களையும் பெற்றதே யில்லையென்ப தாம். இதுவரையிலுரைத்த நியாயங்களால் காரணமொன்றே முக்காலத்து முள்ளதென்றும், காரிய முக்காலத்து மில்லையென்றும், அஃதுஞ் சொல்மாத் திரமும் தோற்றல்மாத்திரமுமாமென்றும் கூறினும். இதனுனே மண் எப்போ தும் உள்ளதென்பதும், கடம் எப்போதும் இல்லதென்பதும் துணியப்பட்ட மை காண்க.

ஒரு பொருள் உண்டாகவேண்டுமானுல் முன்பு இல்லாதிருந்தே உண் டாகவேண்டும். இல்லாதிருந்தது இறந்தகாலத்தில்; உண்டாதல் நிகழ்காலத் தில். இறந்தகாலமும் நிகழ்காலமும் ஒன்ருகா. அங்ஙனமாகாவிடத்து இன் மையாயுள்ள காலமும், உண்மையாயுள்ள காலமும் வேறேயாம். ஓரோகாலத் து இன்மையும், உண்மையும் ஆதல் பொருந்தாது. கடம் உண்டாமிடத் துக் கடம் இருந்து தோன்றிற்ரு? இல்லாமல் உண்டாயிற்ரு? இவ்விஞவுக்கு இருந்தே தோன்றிற்றெனின், இருந்தது தோன்றுவதற் கிடமில்லை; இல்லா ததே தோன்றிற்றென்போமாயின் "இல்லது வாராது" என்னும் நியாயத்தால் இல்லது தோன்றுதல் அமையாது. அன்றி இன்மையும் உண்மையும் காலவே றுபாட்டைப் பெற்றிருக்கின்றமையால் நிகழ்காலத்தில் இன்மையும் உண் மையுங்கூடா. இதனுல் பொருள் தோன்றுவதற்கேயிடமில்லையென்றுணர்க. ஒருபொருள் அழியவேண்டின் உள்ளது ஒருகாலமும், அழிவு ஒருகாலமும் ஆகும். அழியுங்காலத்து இருந்தது அழிந்ததா? இல்லாதது அழிந்ததா? இக் கேள்விக்கு இருந்தது அழிந்ததென்றே விடை அளிக்கவேண்டும். இருப்ப தாய உண்மையும் அழிவதாய இன்மையும் ஓரோகாலத்தி லியையா. ஆகலின் உள்ளபொருள் அழிவுபாடடைவதற் கிடமின்றென்க. "இல்லதுவாராது, உள்ளது போகாது" என்னும் நியாயம் இதனை உறுதிப்படுத்துகின்றது.

காரியமானகடம் அசத்தாஞலும் காரணமான மண்ணுயினும் சத்தென் று கூறலாமேயென்ருல் எது காரணமெனப்படுமோ, அது பிறிதொன்றிற் குக் காரியப்பட வேண்டும். வஸ்திரத்திற்கு நூல் காரணமேனும், அந்நூல் பஞ் சினுக்குக் காரியமாம். அங்ஙனமே கடத்திற்குமண் காரணமாயினும் அம்மண் ணும் தன்காரணமான அணுவுக்குக் காரியமாம். காரியமென்பதனைத்தும் எப் போதும் இன்றென்று முன்னரோ கூறியுள்ளோமாகலின் மண்ணும் அசத்தெ ன்றே துணியப்படுமென்க.

காரியமாகவேனுங் காரணமாகவேனும் உள்ளதியாதோ, அதுவே உண்மையாயுள்ளது எனின், காரியமாகவேனும் காரணமாகவேனும் இருந்ததுயாதோ, அது காரியமாகவாவது காரணமாகவாவது இருக்கவேண்டும். காரியமென் றுரைக்கின்றாமெனின், காரியம் முக்காலத்துமில்லையென்று துணியப்பட்டது. காரணமென்றாலோ எது காரணமோ அது காரணமாகவேயிராமல் பிறிதொன்றுக்குக் காரியப்படுகின்றது. காரியம் முக்காலத்துமின்றென்பதே துணிபாம். காரிய காரணம் சங்கலித்தொடர்பாய் முடிவின்றி நிற்குமெனின் அதுவும் காரிய காரணத்திலடங்கி அசத்தாகின்றது.

பரமாணு அழியாமல் எப்போதுமிருந்து காரியப்பட்டு மீண்டும் அழிந்து காரணமாகவேயிருக்கும்; அது ஓர்போதும் காரியப்படுவதில்லை; எப்போதும் காரணமாகவே யிருப்பதொன்றாமாகலின். யாவுங் காரியப்பட்டுப் பரமாணு மாத்திரம் காரியப்படாதென்பதற்கு நியாயம் ஏதும் புலப்படவில்லை. அதுவே காரணமாமெனின் ஓர் பரமாணு பிறிதோர் பரமாணுவினோடும், அது மற்றொரு பரமாணுவினோடும் கூடி, யிவ்வாறே காரியப்பட்டு மகத்தாகவேண்டும். முன்பு ஒரு அணுவோடு மற்றொரு அணு கூடுமாயின், ஒருபக்கங்கூடி, மற்றையபக்கம்கூடாதிருக்கவேண்டும். திருஷ்டாந்தமாக ஒரு எலுமிச்சங்கனியோடு பிறிதொரு எலுமிச்சங்கனி கூடுமாயின் ஒருபக்கம்கூடி மற்றப்பக்கம் கூடாதிருக்கப் பிரத்தியக்ஷமாகக் காண்கின்றோம். இவ்வாறே ஒருபொருளோடு பிறிதொருபொருள்கூடுங்கால் ஒருபக்கங்கூடி மற்றையபக்கம் கூடா. கூடியவிடத்துக் கூடாமையும் நிகழ்தலின் முன் பின் நடு முதலியன நிகழ்வது ஒருதலையாம். எது அவயவத்தோடுங்கூடியதோ அஃது ஓர்போதும் காரணமாகாது; காரியமேயாமென்பது திண்ணம். காரணமாயிருப்பனயாவும் காரியமாக, இஃதுஒன்று மாத்திரம் காரியப்படாதென்பது நியாயமல்ல. எது எவ்வாறு இருக்கினும் காரணம் ஒன்றிருக்கவேண்டுமெனின் அதுமாத்திரம் ஏன் காரியமாகாது? உலகம் உண்டாதற்குக் காரணம் ஒன்று வேண்டுமேயெனின் அங்கு காரணமான அணு நிலைபெற்றாலல்லவா இங்கு உலகமென்பதுசத்தாம். காரிய காரண முடிவின்றிச் செல்லுமெனின் அளவுகடத்தல் என்னும் அனவஸ்தாதோஷமுண்டாகும். ஆதலால் முடிவில் எவ்வகை அணுவும் இருப்பதாக வுரைத்தல் ஒருவாற்றானும் பொருந்தாதென்க.

கண்ணுக்குவிஷயமான அணு அசத்தாயினும் கண்ணுக்கெட்டா அதிநுட்ப அணு சத்தென் றுரைப்போமெனின், அஃது பிரத்தியக்ஷமன்று. அநுமான ப்ரமாணத்தால் அறியப்படுமெனின் பிரத்தியக்ஷமான சத்தைக் கொண்டு அப்பிரத்தியக்ஷமான சத்தையறிவது அநுமானத்துக்கு இலக்கணமாம். இவ்விலக்கணத்தால் புகையுஞ் சத்து, நெருப்புஞ் சத்து. புகை பிரத்தியக்ஷம், நெருப்பு அப்பிரத்தியக்ஷமாம். பிரத்தியக்ஷமானபுகையால் அப்பிரத்திக்ஷமான நெருப்பை யறிவது தகுந்த திருஷ்டாந்தம். இந்தத் திருஷ்டாந்தத்தைப் போல் தாஷ்டாந்தம் ஒவ்வவில்லை. கண்ணுக்கு விஷயமான அணு அசத்தென்று துணியப்பட்டது. கண்ணுக்குப் புலப்படாத அணு அவசியம் சத்தா யிருக்க வேண்டுமென்பது பூர்வபக்ஷியார் கருத்து. பிரத்தியக்ஷமான புகை சத்தாயிருப்பதுபோல் தாஷ்டாந்தத்தும் கண்ணுக்கு விஷயமான அணு சத்தாயிருக்கவேண்டும். அங்ஙனமின்றி அது அசத்தாய்ப்போனமையால் திருஷ்டாந்தம் ஆபாசமாகின்றது. கண்ணுக்கு விஷ

யமான அணு சத்தாயிருக்குமேல் பிரத்தியக்ஷமான இந்தச் சத்தைக் கொண்டு அப்பிரத்தியக்ஷமான (கண்ணுக்குத்தோன்ருு) அணு சத்தாயிருக்கின்றதென்றே அநுமானிக்கலாம். புகையை ஆராய்ந்தபோது பனியாய்ப் போமானுல் புகை அசத்தாய்ப்போமன்ருு? புகை அசத்தாய்ப்போமானுல் நெருப்பு எப்படிச்சத்தாகும்? அநுமானப்பிரமாணம் தோற்றமென்றும், யதார்த்தமென்றும் இருவகைப்படும். அவற்றுள் தோற்றஅநுமானத்தால் பொருள் சித்தித்திலது; யதார்த்த அநுமானத்தாலேதான் பொருள் சித்திக்கற்பாற்று. புகையதார்த்தம்; புகையைப்போல் தோற்றி ஆராய்ச்சியில் பனியாய்ப்போவது தோற்றமாம். யதார்த்தமான புகையால் நெருப்புச்சித்திக்குமன்றித் தோற்றப் புகையால் (அதாவது பனியால்) சித்தியாது. அவ்வாறே கண்ணுக்கு விஷயமான அணுவால் கண்ணுக்கு விஷயமாகாத அதிநுட்ப அணு சித்தித்தலின்றென்க.

இதுவரையிலும் கூறிப்போந்ததனுல் "அணு முடிவிலில்லாமற்போய்விடுதல் அசங்கதம். கண்ணுக்குக் காணக்கூடாமல் அதிசூட்சுமமாயிருக்குமத்தால் அதனை யில்பொருளாகத் துணிதல் கூடாது" என்று பிரதிவாதியாருரைத்தது நியாயமாகவே பூர்வபட்சப்படுகின்றது. "(உள்ளதுபோகாது, உள்ளதுஉள்ளதே) என்னுந் தருக்கத்தால் கடம் சிதைந்து பரமாணுவானவிடத்தும் போகாததும், உள்ளதுமேயாம்" என்ருர். 'உள்ளது போகாது, உள்ளது உள்ளதே' என்னும் தருக்கம் எமக்கும் உடன்பாடே. கடம் உள்ளதென்று நியாயத்தால் காட்டின பின்னன்ருே அது பரமாணுவான விடத்தும் உள்ளதென் றுரைக்கவேண்டும்? கடம் சத்தென்பதற்கு யாதொரு ஆதாரமுமில்லாமையால் அதை யுள்ள பொருளென்றுரைத்தல் அமையாது. கடமானது நிகழ்காலத்தியேயில்லையென்றபோது பரமாணுவானகாலத்திலா இருக்கப்போகின்றது? "(இல்லது வாராது, இல்லது இல்லதே) என்னுந் தருக்கப் உலக மில்லதாயின் வரமாட்டாது. வந்திருக்கையால் முயற்கோடு ல் இல்லதாகமாட்டாது" என்ருர். 'இல்லது இல்லதே' என்னுந்தருக் தயாம் அநாதரவுசெய்தேமில்லை. அது எமக்குஞ் சம்மதமேயாம். ஆ அந்தத் தருக்கத்தின்படி உலகம் இல்லதேயென்றும், இல்லாமையால் பில்லையென்றும் கூறுகின்ரும். "உலகம் இல்லாததாயின் (இல்லதற்குத் தோற்றமின்மையின்) என்ற நியாயத்துக்கு விரோதமுண்டாம்; அவ்வுலகு தோன்றியிருத்தலால்" என்ருர். இல்லதற்குத் தோற்றமில்லையென்பது குற்றம்; கயிற்றிற் பாம்பும், கானலினீரும், சந்நிபாத தோஷமுள்ளவனுக்கு எதிரில் தோன்றும் பொருள்களும், சொப்பனத்தில் பிரபஞ்சமும் இல்லாதனவாயிருந்தும் தோற்றுகின்றமையாலென்க. தோற்ற மிருவகை: உள்ள பொருள் தோற்றுதலும், இல்லாப்பொருள் தோற்றுதலுமாம். இல்லதற்குத் தோற்றமில்லையென்பதன் பொருள் அசத்து அல்லதுசத்துப்போலிக்குச் சத்துத்தோற்றமில்லையென்பதாம். கயிற்றிற்காணும் (இல்லாத) பாம்பு யதார்த்தமான தோற்ற மல்லவென்பதாம். "அது ஒடுங்குமிடத்து இல்லாததாய் விடுமெனின், (யாது யாண்டொடுங்கும், அஃதாண்டுதிக்கும்) எனவும், (ஒடுங்கின விடத்தினின்று மீளவுண்டாம்) எனவும் போந்த தருக்க வுரைகளால் புனருற்பவங்கூறும் வேதாகமங்களும் பொய்ப்பட்டுப்போம்" என்ருர். ஒடுங்குதலாவது காரியம் காரணத்தில் அடங்குவதென்பது அவர் சம்மதம். காரியத்திற்குப் பொருளின்னதென்று விளங்காமையாலும், அதற்கு மறுப்பினை

முன்னரே யாமுரைத்திருக்கின்றமையாலும் ஒடுங்குதலென்பது சொல்மாத்திரமே ; பொருள் இருந்தன்று. கானலினிடத்து நீரும், அறிவின்கண் சொப்பனவுலகமும் ஒடுங்கி, ஒடுங்கினவிடத்தினின்று மீளவுண்டாவதுபோலெனின் நியாயமாகும். அவ்வாறன்றிச் சத்தென்பதமையாது. 'யாண்டொடுங்கும், அஃதாண்டுதிக்கும்' என்பதற்குக் கடம் மண்ணின்கண் ஒடுங்கி மீண்டும் அதினின்றே உதிக்குமென்றுவைத்துக்கொள்ளலாம். ஆனால் இது வியாவகாரிகமேயன்றி உண்மையன்று ; மண்ணைத்தவிரக்கட முக்காலத்துமின்றாதலாலென்க. o கிரமசிருஷ்டியுரைக்குமிடத்து வேதம் வியாவகாரிக சிருஷ்டியை அங்கீகரித்து, [illegible] * யுகபத்சிருஷ்டியைச் சொல்லும்பொழுது அவ்வேதம் க்ஷிகிரம சிருஷ்டியைப் பூர்வபக்ஷம்பண்ணிக் கண்டனை செய்தது. (ஆதலால் யாது யாண்டொடுங்கும், அஃதாண்டுதிக்கும்) எனவும், (ஒடுங்கினவிடத்தினின்று மீளவுண்டாம்) எனவும்கூறிய தருக்கவுரை பூர்வபட்சமாகச் சம்மதமாம். உலகைச் சத்தெனக்கொள்ளுவாரை அநுசரித்து வேதமுன்பு கிரமசிருஷ்டிகூறி, பின்பு யுகபத் சிருஷ்டி யுரைப்பதென்றுணர்க. ஆதலால் இது வைதிகசித்தாந்தமேயாம். இதுநிற்க, இன்னும் உலகம் அசத்தைப்பற்றிக்கூறுவாம்:—

(உலகினின்றும் பற்பல பொருள்கள் காரியப்பட்டுப் பின் காரணமாவதைக் கண்டிருக்கின்றோமல்லாமல் உலகம் காரியப்படுவதை நாமேனும் நம் முன்னோரேனும் கண்டதுமில்லை, கேட்டதுமில்லை. காணுதல் உடலன்றியாகாது ; கேட்பதுபிறர்கூறியே கேட்கவேண்டுவது; கூறல் காணுதலின்றியமையாது; காணுதல் உடலோடுகூடியே ஆகவேண்டுவது ; உடலுலகன்றியின்றாம். உலகத்தினது இல்லாமை உடலல்லாமற் பிறிதொன்றிருந்து கண்டாரை யாம் காண்கின்றிலேம். ஆதலால் உலகம் என்றுமுள்ளது; காரியமன்று, காரணமேயெனின் கூறுவாம்:

ஒவ்வொருபொருளினையும் ஆராய்ச்சிசெய்யின் ஒன்றன் கூட்டம், அல்லது பலவின் கூட்டமென்று இருவகைப்படும். எந்தப்பொருளும் இவ்விரு தன்மையிலே யடங்கும். திருஷ்டாந்தமாகக் கடம் ஒன்றன் கூட்டமா? பலவின் கூட்டமா? எனின் ஒன்றன்கூட்டமான மண்ணையன்றிக் கடம் முக்காலத்துமின்றாம். அம்மண்ணும் ஒன்றன்கூட்டமான அணுவினையன்றியின்றாம். பலவின்கூட்டமுமிதுபோலுமென்க. இவ்வண்ணமேஒவ்வொருபொருளையும் ஆராயுமிடத்து அபாவமாகவேமுடியும். உலகு இவ்வகைப்பட்ட ஆராய்ச்சியில் அபாவமாம். ஒன்றன்கூட்டம் பலவின்கூட்டமென்பவை காரணமாம். அணுவை முன்பே பூர்வபக்ஷம்செய்தமையாலாண்டு கண்டுகொள்க.

"உலகம் காரியப்படுவதைக் கண்டாரும் கேட்டாரும் இல்லையாகலின் எப்போதும் நித்தியமென்றுரைப்பாம்" எனின் உலகம் எப்போதும் சத்தாய் நித்தியமா? அசத்தாய் நித்தியமா? சத்தாய் நித்தியமேல் இதுவரையிலுமுரைத்த நியாயங்களால் சத்தென்றுரைப்பது பொருந்தாது. அசத்தாய் நித்திய

---

o கிரமசிருஷ்டி: ஒன்றன்பின் ஒன்றாயுதிப்பது; பஞ்சினிடத்துநூலும், நூலின்கண் ஆடையும்போல.

* யுகபத்சிருஷ்டி: ஒரேதடவையா யுதிப்பது ; அது கடல்நீர், அலை நுரைகுமிழியாவதுபோல.

மேல் இல்லாதது நித்தியமென்று கூறுதலினால் யாதுபயன்? இல்லாத முயற் கொம்பினையும் நித்தியமென்றுரைப்பதனோடு ஒக்குமல்லவா? உலகு எக்காலத்தும் அசத்து அல்லது சத்துப்போலியாகலின் அதனைக் காரியமென்றேனும் காரணமென்றேனும்கூறுதல் எவ்வாற்றானும் பொருந்தாதென்றுணர்க.)

இதுமட்டும் கூறிவந்ததில் உலகம் அசத்தாயினும் பிரத்தியக்ஷமாகச் சுகதுக்கங்களை அநுபவிக்கின்றோமே; எப்படி உலகத்தை அசத்தென்றுரைப்பது? இது வாயடி கையடியாயிருக்கின்றதன்றிச் சந்தேகமொழியவில்லையே யெனின் சொப்பனமுற்றும் பொய்யல்லவா ? அச்சொப்பனத்தில் பிரத்தியக்ஷமாக அநுபவிக்கும் இன்பத்துன்பங்களும் அவ்வுலகமும் பொய்யாய்ப்போகவில்லையா? அங்ஙனமே யிவ்வுலகையும் அதனின்பத்துன்பங்களையும் ஏன் பொய்யென்றியம்பப்படாது?

ஒருபொருளை யறியவேண்டின் அப்பொருளுக்கு வேறாய்நின்றே யறியவேண்டும். வீட்டை அறியவேண்டின் வீட்டிற்குவேறாய்நின்றே அறிகின்றோம்; கடபடங்களையறியவேண்டுமானால் அவற்றையும் வேறாய்நின்றே அறிகின்றோம். இவ்வாறே எல்லாப்பொருள்களையும் அறிகின்றோம். அங்ஙனமே இவ்வுலகை யறியவேண்டின் வேறாய்நின்றே யறியவேண்டும். அங்ஙனம் கண்டுரைத்தார் யாருமிலர். காண்பவர், சமஷ்டியான உலகஅமிச வியஷ்டி சரீரத்தைக்கொண்டு அறிகின்றமையால், அது வேறுபட்டு அறிந்ததாக யாங்ஙனம் உரைக்கலாம்? அசத்தியமான சொப்பன சரீரத்தின்கண் அவ்வசத்திய சகத்தின் அமிசமான அசத்திய சரீரத்தைக்கொண்டு அச்சகத்தை அவ்விடத்தில் காணும்வரையில் அது சத்தியமாகவே தோன்றினும், அச்சகத்தையும் அச்சகத்தின் அமிசமானசரீரத்தையும்விட்டு வேறாயிருக்கும் இப்போது, அது பொய்யாய்ப்போகவில்லையா? சொப்பனாவஸ்தையில் சொப்பனசகம் சத்தியமாகக்காணப்படினும் சத்தியமாக அறியினும் அக்காலத்தும் அச்சொப்பன சகம் எப்படிப்பொய்யோ,அப்படியே இச்சகமும் இச்சக அமிசமான சரீரமும் பொய்யென்று ஏன் கூறப்படாது? ஐயமின்றிக்கூறலாம். இதனானே ஒருபொருளை அறியவேண்டின் அறிபவன் வேறாய்நின்றே அறியவேண்டுமெனவும், அவ்வாறின்றி அதுவாயிருந்து அறிதல் பொய்யு மெய்யாய்த்தோற்றுமெனவும் கூறியவாறென்பது.

ஒருபொருள் உள்ளதா? இல்லதா வென்றாராயவேண்டின், அப்பொருளின் ஓர்பால் பிறிதோர்பாலொடுபொருந்துதலினாலேயே உள்ளதெனக்கொள்வது எவ்வாற்றானுமமையாது. அப்படிக்கொள்வதினால் கானனீரின்அலை பிறிதொரு அலையுடனே சம்பந்தப்படுவது கொண்டே, அக்கானல்நீரையும் உண்டென்று கொள்ளவேண்டிவரும். இங்ஙனமே உலகின் ஓர் பகுதி பிறிதொருபகுதியினோடு பொருந்துதலினானே உலகைச்சத்தென்றுரைத்தல் அடாது.

பொன் பூஷணமாய்த்திரிந்தபோதும் திரியாதபோதும் ஒருதன்மையாயிருக்கக்கண்டோமென்றும், அவ்வாறு அறிவும் அறிபடுபொருளும் ஒருதன்மையாயிருக்கவில்லையென்றும் பிரதிவாதியார் உரைக்கின்றார். பொன்னாகிய காரணத்தில் பூஷணமாகிய காரியம் தோற்றமேயன்றித்திரிபல்ல; திரிபு

போல் தோற்றுகின்றது. அவ்வாறே பரவஸ்துவின்கண் சேதனு சேதன மானவுலகம் தோற்றுகின்றது. பரவஸ்துதிரியவுமில்லை; காரியப்படவுமில்லை. இதுநிற்க; (ப்ரம்மவித்யா 1888௵ செப்டம்பர்௴ 15௳)

ஓர் நண்பன்.

## சொப்பனம் சத்தியமென்பதை மறுத்து, அறிவே உலகமென உரைத்தல்.

ஆங்காங்கு வேறு வேறு உவமானங்க ளுரைப்பது ஒன்றுக்கொன்று விரோதமா யிருக்கின்றதெனப் பிரதிவாதியார் குற்றங்கூறுகின்றார். அது அவரவர் பக்குவாபக்குவங்களை யநுசரித்து அவசரபேதமா யுரைக்கப்படுகின்றமையால் யாதுங் குற்றமின்றெனக. அதன் விவரத்தை ஆசிரியர் மாணுக்கன் இவ்விருவர் சம்பாஷணையாகவைத்துச் சமாதானஞ் சொல்வாம்.

உலகமொன்றேயுளது, அது அழிவதில்லை யென்னும் மாணுக்கனைநோக்கி, உலகம் காரியமேயன்றிக் காரணமல்லவென்றும், காரணமாவது எங்கும் பரிபூரணமான பரவஸ்துவேயென்றும் தாயினிடத்துப் பிள்ளை எப்படிப் பிறந்ததோ, அப்படியே பரவஸ்துவின்கண் உலகு உதித்ததுஎன்றும் ஆசிரியர் கூற, மேலே மாணுக்கனுக்கும் ஆசிரியர்க்கும் நடக்கும் சம்பாஷணையாவது:—

மாணுக்கன்: தாயினிடத்துப்பிள்ளை பிறந்ததுபோல் பரவஸ்துவின்கண் உலகுதிக்குமாயின் தாய்வேறு பொருள், பிள்ளைவேறுபொருள். அன்றி இரண்டும் கண்டப்பொருள். இவ்வுவமானப் பிரகாரம் உவமேயத்தைப் பார்ப்போமானால் பரவஸ்துவும் கண்டப்பொருள், உலகமுங் கண்டப்பொருளாகின்றது. இது பரவஸ்து பரிபூரணமென் றுரைத்ததற்குவிரோதமாகின்றதே.

ஆசிரியர்: உலகமே பொருளென்றும், அதற்குக்காரணம் பிறிதொருபொருளில்லையென்றும் கூறும் சித்தாந்தத்தை மறுக்கவேண்டி, இதற்குமேல் பொருளொன்றுண்டெனத் தாய் பிள்ளையுவமானங் கூறினதேயன்றி, அதுவே சித்தாந்தமன்று. பின்னை, பால் தயிராவதுபோல் பரிணமவாதமாம். தாயும்பிள்ளையும் வேருனமையினுல் உண்டாகும் பரிபூரணதோஷம் பாலேதயிராவதான பரிணமவாதத்தில் இல்லை. இவ்வுபமானத்திற்கு உவமேயம் பரவஸ்துவே உலகம்.

மாணுக்கன்: ஆசிரியரே! நீருரைத்த தோஷமில்லாவிடினும் வேறு பெருந்தோஷமுண்டாகின்றது. அஃதியாதெனின் பாலே தயிராவதில் பால்கெட்டுத் தயிராகின்றதென்பதாம். இவ்வுவமானப்படிப் பரம் கெட்டு உலகாகின்றது. அதனே டொழியவில்லை. பால்கெட்டுத்தயிரானுல் தயிர் தயிராகவே யிராது; அதுவுங் கெட்டு வேறும், அதுவுங்கெட்டுப் பிறிதென்றுமாகி, முடிவில் இன்ன நிலைமைத்தென்றுரைக்க இயலாமற்போம். அங்ஙனமே பரம்கெட்டு உலகாகி, அதுவுங்கெட்டு வேருகி, அதுவுங்கெட்டு மற்ருென்ருகி ஈற்றில் இன்னநிலைமைத்தென்று கூறமுடியாமற் போம்.

ஆசிரியர்: அஃதுண்மைதான். நாம் பரிபூரணதோஷம் வராமற்பொருட்டும், இரண்டுபொருள்களல்லவென்பதற்கும் பால் தயிரென்னும் உவமானங்கூறினதேயன்றி அதுவே ஸித்தாந்தமன்று. பின்னை மண்கடம்போல் காரணகாரியமாம். மண்கெடாமல் கடமாவதுபோல் பரவஸ்துகெடாமல் உலகாகின்றது.

மாணாக்கன்: இதிலும் தோஷமில்லாது போகவில்லை. மண்விகாரப்பட்டன்றோ கடமாகின்றது ? அங்ஙனமே பரம் விகாரப்பட்டன்றோ உலகாகவேண்டும் ? நிர்விகாரமான பரத்துக்கு விகாரத்துவங் கற்பிப்பது நியாயமன்றே.

ஆசிரியர்: உண்மைதான். பால்கெட்டுத் தயிராவதுபோல் மண்கெட்டுக் கடமாவதில்லை யென்பதற்கும், தயிர்மீண்டும் பாலாகாமற்போ போவதுபோலன்றிக் கடம்மீண்டும்மண்ணாகுமென்பதற்கும்இவ் வுவமானமேயன்றி மற்றப்படியல்ல. இனி விகாரப்படாதவுவமான மூறைக்கின்றோம். அஃதாவது சூரியனும் பிரதிபிம்ப சூரியனும்போல. சூரியன் விகாரப்படாமல் எப்படிப் பிரதிபிம்பிக்கின்றானோ, அப்படியே பரமும் விகாரப்படாமல் பிரதிபிம்பிக்கின்றது.

மாணாக்கன்: இதிலும் சங்கையில்லாமற் போகவில்லை. பிம்பப்பொருள் பிரதிபிம்பிக்கிறதற்கு ஆதாரமொன்று வேண்டும். சூரியன் பிரதிபிம்பிப்பதற்கு ஜலம் எப்படி ஆதாரமோ, அப்படியே பரம்பொருள் பிரதிபிம்பிப்பதற்கு ஆதாரமொன்று வேண்டும். எது மற்றொரு ஆதாரத்தில் பிரதி பிம்பிக்கின்றதோ, அது அபரிபூரணப் பொருளாயிருக்கவேண்டுமேயன்றி, ஓர்போதும் பரிபூரணப் பொருளாகாது. ஜலத்தில் பிரதிபிம்பிக்கும் சூரியனும், கண்ணாடியிற் பிரதிபிம்பிக்கும் நமது முகமும் பரிபூரணப்பொருளாமா? சூரியனும் நமது முகமும் ஒரு இடத்திலும், ஜலமும் கண்ணாடியும் பிறிதொரு இடத்திலும் இருக்கின்றமையால் பிம்பப்பிரதிபிம்ப வுவமானம் அபரிபூரணப் பொருளுக்கே பொருந்துமென்றவாறாயிற்று. இவ்வுவமானப்பிரகாரம் பரம் அபரிபூரணப் பொருளாகின்றது.

ஆசிரியர்: பிம்பப்பிரதிபிம்ப திருஷ்டாந்தம் பரவஸ்து விகாரப்படுவதில்லை யென்பதற்கு மாத்திரமே. இனிப் பரிபூரண தோஷமில்லாமைக்கு வேறு திருஷ்டாந்தமுறைக்கின்றோம்; அஃது கயிற்றிற் பாம்பும், கிளிஞ்சலில் வெள்ளியும் எப்படித்தோற்றமோ, அப்படியே பரத்தினிடத்துச் சிற் சடமான வுலகு தோற்றுகின்றது.

மாணாக்கன்: இதிலும் வினா நிகழ்கின்றது. கயிற்றைத்தவிரப் பாம்பு இல்லையெனத் தெளியின் பின்னர்ப் பாம்புதோற்றுவதில்லை. உலகு காரணத்தையன்றி யில்லை என்றுணரினும் மீண்டும் தோற்றுகின்றது. மண்ணையன்றிக் கடமென்னும் பொருளின்றென ஆய்ந்தறியினும் பெயர்த்தும் தோற்றுவதைப் பார்க்கின்றோமன்றோ ?

ஆசிரியர்: உலகம்பொருளல்லவென்பதற்குமாத்திரம் கயிற்றிற்பாம்பும்கிளிஞ்சலின்கண் வெள்ளியும் திருஷ்டாந்தமேயன்றி முற்றுமல்ல.

இனி அத்தோஷமும் வாராமற் பரிகரிக்கின்றோம். அஃதியா தெனின் கானனீராம். கானலையன்றி நீர் முக்காலத்து மின்றெனத் துணியினும் மீண்டும் தோற்றிக்கொண்டே யிருக்கின்றது. அதுபோல் உலகம் அசத்தெனத் துணியினும் தோற்றிக் கொண்டேதா னிருக்கும்.

மாணாக்கன்: கானலினிடத்து நீரில்லையென்று தெளிந்தபின்னர்த்தோற்றினும் அது அநுபவத்திற்கு வருவதில்லை. அஃதாவது நீரை அருந்தவுதவுவதில்லை. உலகோ அவ்வாறன்று; சத்த ஸ்பரிச ரூப ரச கந்தங்கள் அநுபவிக்கப்படுகின்றன. ஆகவின் இத்திருஷ்டாந்தம் பொருத்தமுறாது.

ஆசிரியர்: உலகம்,அசத்தென்றுணரினும் பெயர்த்தும் தோற்றும் என்பது வரையிலுமாத்திரம் கானனீர் திருஷ்டாந்தமாம். மற்றப்படி அநுபவமாகின்றதைப்பற்றிவேறுதிருஷ்டாந்தம் கூறுவோம்: அஃதாவது சந்நிபாததோஷத்திற் காணும் உலகும், சொப்பனவுலகும்,பிறவும் போலுமாம். சந்நிபாததோஷ முதலியவற்றாற் காணும் உலகு, தோற்றமேனும் அனுபவத்தோடுங்கூடிய தோற்றமாம்.

இதனால் வேறு வேறு உவமானங்களுரைத்ததற்குச் சமாதானம்விளங்கியது.

கயிறு ஜடம், அரவுசித்து. இது உவமானம். அறிவுசித்து, உலகம் சடம். இது உவமேயம். சடமான உவமானம் சித்தான வுவமேயத்துக்கும், சித்தான வுவமானம் சடமான வுவமேயத்துக்கும் உரைப்பது பொருந்தாதென்று உரைத்ததனோடு நாம் திரிபுணர்ச்சியால் மயங்கினதாகவும் கூறியுள்ளார். அறிவினின்றும் உலகம் தோற்றுமென்னும் உவமேயத்துக்குக் கயிற்றரவு உவமானம், ஒன்றிலொன்று தோற்றுமென்பதுவரையில் மாத்திரமாகவின் பொருத்த முடையதேயாம். எதற்காக வுவமானம் உரைக்கப்படுகின்றதோ, அதுவரையில் நின்று உரையாடல்வேண்டு மல்லது மற்றப்படிபேசுவது தகுதியன்று. அறிவினின்றும் உலகு உண்டாவதற்குக் கயிற்றின்கண் அரவுண்டாதலொன்று, அறிவினின்றும் அரவுண்டாதலொன்று. இவ்விரண்டும் ஒன்றினின்று பிறிதொன் றுண்டாவதற்குப் பொதுவான உவமானமாம். இவற்றில் கயிற்றின்கண் அரவுண்டாதல் ஒன்றினின்று மற்றொன்றுண்டாதல் வரைக்கும், அறிவினின்றும் அரவுண்டாதல் சித்தினின்றும் சித்சடமான வுலகுண்டாதல் வரைக்கும் உவமானமாம். இதில் திரிபுணர்ச்சி யாதுமின்றென்க. உவமானம் ஏகதேசமெனவும், உவமேயத்தில் இன்னகுணத்துக்காக இன்னவுவமானம் எடுக்கப்பட்டதென்வும் உணர்தல்வேண்டும்.

"ஒருவன் ஒருபதார்த்தத்தை விசாரித்து இல்லையென்றுவாயாற்சொல்லிவிடுவதினாலேயே அது இல்லாமற் போய்விடமாட்டாது. ஒரு பதார்த்தமிருந்ததனால், அதனை விசாரிக்கவந்ததேயன்றி அது இல்லையாயின் விசாரிக்கவேண்டிய தின்றாம்" என்றார். அவ்வாறு இல்லையென்று நாம் வாயாற் சொல்லவில்லை; நியாயத்தாலேதான் ருசுப்படுத்தினோம். இல்லாத பதார்த்தத்தையும் விசாரிப்பதுண்டு; கயிற்றின்கண் அரவான இல்லாப்பதார்த்தத்தை விசாரிப்பதுபோலென்க. "இல்லாதது உள்ளதாகத் தோற்றியதற்கு

ஓரேதுவேண்டுமாகலின், அவ்வேது யாது? ஏதுவின்றி முன்னில்லாதது தோன்றமாட்டாதாகையால், முன்னிருந்ததே தோன்றியதெனல் சித்தம்'' என்றார். முன்னில்லாதது தோன்றமாட்டாதென்றும், முன்னிருந்ததே தோன்றுமென்றும் அவர் சொல்வது நியாயமான துதான். மண்ணினிடத்துக் கடாதிகள் தோன்றுமேயன்றி வஸ்திராதிகள் தோன்றுமா? நூலின்கண் வஸ்திராதிகள் உண்டாகுமேயன்றிக் கடாதிகள் தோன்றுமா? இதனால் அந்தெந் தச்சத்திகள் எதெதின்கணுளவாமோ, அந்தந்தச்சத்திகள் அததின்கண்ணின்று வெளிப்பட்டுக் காரியமாகின்றனவென்றும், இல்லது வாராதென்றும், உள்ளது போகாதென்றும் ஏற்படுகின்றன. இதனால் காரியம் சத்துப்பொருளாகமாட்டாது. கானலின்கண் நீர் தோன்றிப் பின்னும் அதிலேயே மறைந்து மீண்டும் தோற்றுகின்றது. கானலினிடத்து நீர்தோற்றுமேயன்றிக் கடபடாதிகள் தோன்றமாட்டா. இன்னதில் இன்னதுதான் தோன்றுமென்னும் நியமமிருக்கின்றமையால் அன்னதில் அன்னதேதோன்றும். இதனால் தோற்றமெல்லாம் பொருளென் றுரைத்தலமையாது. "முன்னிருந்ததே தோன்றியதெனல் சித்தம்'' என்றவர் உரைத்தது உண்மையே. கானலினிடத்து நீர் தோற்றுந்தன்மை முன்னரோ உண்மையானென்க. இதனால் உலகம் சத்தாதல் ஓர்போதுமில்லை.

கயிற்றின்கண் அரவு உண்டாதற்குக் கயிறும் காரணந்தான், அறிவுங் காரணந்தான். கயிறுமாத்திரம் காரணமாகாது. கயிறேகாரணமாயின் மயக்கம் நீங்கித் தெளிந்தபின்னரும் அரவுகாணப்படவேண்டும். அறிவொன்றே காரணமென் றுரைப்பாமெனின் கயிறில்லாவிடத்து அரவு காணப்படவேண்டும். அவ்வாறின்மையின் இரண்டும் காரணந்தான். அவ்வாறே கடத்தோற்றத்திற்கு மண்ணும் அறிவுங் காரணமாம். மண்ணை விசாரித்தவிடத்துப் பொருளில்லாமற் போகின்றமையின் அறிவைக் காரணமென்றாம். உலகும், உலகைச் சத்தென்றாவது அசத்து அல்லது சத்துப்போலி யென்றாவது அறியும் அறிவும் பரவஸ்துவின்கண் அசத்து அல்லது சத்துப்போலியேயாம். சடாசடமான உலகில் சடமும் சித்தும் சமஷ்டியில் ஒன்றைவிட்டு ஒன்று பிரிந்திருக்கமாட்டா. இவற்றில் சடம்காரியமும், சித்துக்காரணமுமென் றுரைப்பது எதுபோலெனின், சொப்பனத்தில் காணப்படும் தாய்,பிள்ளை இருவரில் தாய் காரணமும், பிள்ளை காரியமும் என்பனபோலாம்.

"அறிவே கடமாயின் கடமில்லாததாய்விடுகிறபடி அதற்கு மூலமாகிய அறிவும் இல்லாததாய்விடும். இல்லாததில் இல்லாதது பிறக்குமேயன்றி உள்ளதில் இல்லதுபிறவாது'' என்றார். காரிய மில்லாததாயின் காரணமுமில்லாமற்போகவேண்டுமென்ப தென்னநியாயம்? காரியமான கடமுடைந்து இல்லாமற்போனால் காரணமான மண்ணுமில்லாமற்போமோ? வஸ்திரம் கிழிந்துபோனால் நூலுக்குக் கேடுண்டோ? பாம்பில்லாமற்போனால்கயிறு மில்லாமற்போமோ? இந்திர சாலப்பொரு ளில்லாமற்போனால் அதன் காரணமுமறையுமோ? பிள்ளை இறந்துபோனால் தாயும் இறந்துபோகவேண்டுமோ? இல்லாததில் இல்லாதது பிறக்குமென்பதைப்பற்றி நாம் இப்போது பேச அவசியமில்லை; நிற்க; "உள்ளதில் இல்லதுபிறவாது'' என்பது வெறுந்தப்பாகின்றது. உள்ளதான கயிற்றின்கண் இல்லதான அரவும், உள்ளதான கிளிஞ்சலினிடத்து இல்லதான வெள்ளியும், உள்ளதான

கானலினிடத்து இல்லதான நீரும், இவ்வாறு பிறவுந் தோற்றுகின்றமையா லென்க.

இரஜ்ஜு (கயிறு) வின்கண் தோன்றும் சர்ப்பம் சத்தா? அசத்தா? சத சத்தா? இவ்வினுவுக்குச் சத்தெனின் இரஜ்ஜு (கயிறு) என்றறிந்தபோது சர்ப்பம் தோன்றவேண்டும்; தோன்ருமையின் சத்தெனல் அமையாது. அசத்தென்பர்மெனின் மலடிமைந்தன் போன்று தோன்ருமல்இருக்கவேண்டும்; தோன்றுதலின் அசத்தென்றுமுரைத்தல்கூடாது. சதசத்தென்றுரைக்கப்படுமாலோவெனின் மறுதலைப்பட்ட இரண்டுதருமம் ஒன்றின்கணிரா. ஆகலின் சர்ப்பமானது சதசத்விலக்ஷணமென்க. அன்றி இன்ன தன்மைத்தென்று கணிக்கப்படாதெனப் பொருள்கொள்ளும் அநிர்வசநீயமுமாம். இவ்வாறே உலகமும் சதசத்விலக்ஷண அநிர்வசநீயமென்க. முன்பு உலகை அசத்தென்றுரைத்தது யாதுக்கெனின் உலகம் சத்தென்பாரை மறுத்தற்கென்க. உலகம் அசத்தென்பது பூர்வபட்சமேயன்றிச் சித்தாந்தமன்று.

உலகென்பது சேதனுசேதமாம். ஷை சேதனு சேதனத்திற்குச் சாட்சியாயும், காரணமாயும், காரிய காரண ரகிதமாயும், ஆதாரமாயும்,நிராதாரமாயுமுள்ளதெதுவோ, அதுவே பரவஸ்துவாம். அறிவே உலகென்றுரைத்ததில் அறிவென்பது உண்மையாகப் பரவஸ்துவாம். ஷைபரவஸ்து சேதனுசேதனவுலகத்திற்குக் காரணமேனும் சேதனு சேதனமிரண்டனுள் அசேதனத்திற்குச்சேதனம் காரணமாம். இவ்விரண்டற்கும்பரவத்துகாரணம். சேதனு சேதனமான இரண்டினுள் ஒன்று காரணமும்பிறிதொன்று காரியமு மென்றுரைப்பது, சொப்பனத்தில் தோற்றும் தாய் பிள்ளை இவ்விருவருள் தாயைக்காரணமும் பிள்ளையைக்காரியமென்றுரைப்பதுபோலாம். விவகாரத்தில் தாய் காரணமும் பிள்ளை காரியமுமாகவொப்பினும் உண்மையில் அச்சொப்பனத்திற்கு அறிவே காரணமாம். அங்ஙனமே சேதனு சேதனமான வுலகில் ஒன்று காரணமும், ஒன்று காரியமுமாணுலும்யதார்த்தத்தில் பரம்பொருளுக்கு மேற்படி இரண்டும் காரியமாம்.

"சொப்பன வுலகமானதும், சொப்பன சரீரத்தினுழைந்ததும் அறிவேயன்றி அறிவினது பிரகாசமன்று. கண்ணுடியினுழைந்தது சூரியன் ஆகிய முதலாகாமல் அவனது பிரகாசமாக முடிந்தது. இதனுல் உபமான விருத்தமுண்டாயினதன்றியும்,அந்தக்கண்ணுடியில் சூரியன் பிரதிபலித்தபோது பிரகாசத்தை வெளியேகண்டதன்றி ஒரு செங்கற்பலகையில்சூரியன் பிரதிபலித்தலும், அதினின்றுபிரகாச மெழுதலுங் காணக்கூடாமையால் கண்ணுடியைத்தள்ளிச் சூரியப்பிரகாசம்வெளியானதற்குக்காரணம்என்று வரைந்துகொண்டது தவருக முடிந்தது. சூரியனது பிரகாசம் வெளியானதற்கு அந்தச்சூரியனேயன்றி அவன்பிரதிபலித்த கண்ணுடியாகிய நிர்மல வத்துவுங் காரணமாய் நின்றமையால், நம்மவரது நியாயம் நிலைபெருதொழிந்தது" என்ருர்.

சூரியனே பிரகாசரூபமாயிருத்தலால் பிரகாசமென்பதைச் சூரியனுகவைத்துக்கொள்ளலாம். அல்லது சூரியனது பிரகாசமே பிரதிபலித்தது என்று கொண்டாலுங்கொள்ளலாம். இது குற்றமல்ல. சூரியன் பிரதிபிம்பிப்பதற்கு நிர்மலவஸ்துவும் காரணந்தான். அதுபோல அறிவு நிர்மலமான அந்தக்கரணமுள்ள சரீரத்திலேயே பிரதிபிம்பிக்கின்றது. மற்ற அந்தக்கரணங்க

ளில்லாத கல்முதலிய பொருள்களில் பிரதிபிம்பிப்பதில்லை. அறிவின்கண் சொப்பனவுலகு, சரீரம், இந்திரியம், அந்தக்கரணம் இவையாவுமே உண்டாகின்றன. (ப்ரம்மவித்யா 1888ளூ செப்டெம்பர்மீ 30உ ஓர் நண்பன்.

"உலகமே அறிவென்பவரது நியாயத்தை அறிவே உலகம் என்பவர் வருவித்துக் காட்டியதேயன்றி, அந்த நியாயத்தைமறுத்துப் பின்னர்த் தமது ஸிந்தாந்தத்தை நாட்டினாரில்லை." என்றார் பிரதிவாதியார். எமது சித்தாந்தம் அவரது சித்தாந்தத்தை மறுத்தமையானும், அதற்குமுன்னும் அவரது சித்தாந்தத்தை மறுத்தமையானும் அவரது சித்தாந்தத்தை மறுக்கவில்லையென்பது கூடாது. உலகை அசத்தென்றுரைப்பது எமது சித்தாந்தமென்று அவரடிக்கடியுரைக்கின்றார். சத்தென்றுகூறுவாரை மறுத்தற்கு அசத்தென்றுரைப்பதேயன்றி அதுவே எமது சித்தாந்தமன்றென முன்பத்திரிகையிலுரைத்தாம். பின்னர் எமது சித்தாந்தமு மின்னதென்றுங் கூறினும்.

"அத்வைதி" என்றும், "சித்தாந்தி" என்றும் பெயர்பூண்டபிரதிவாதியார் ஆக்ஷேபித்த ஆக்ஷேபங்களுக்குமாத்திரம் இதுகாறும் சமாதானமுரைத்து, மற்றப்படி அவர் நம்மை இகழ்ந்துபேசியதற்கும் பரிகசித்ததற்கும் நாம் பதில் பேசாதிருத்தலே நன்றென்று மௌனஞ்சாதித்தோம். நாமும் அவரோடு அவ்வாறுபேசப்புகின் எடுத்தவிஷயம் முடிவுபெறாமற்போம்; அன்றி மேலோர்குற்றங்கூறுவர். அவரிதுவரையில் பேசியதுமாத்திரமல்ல, இன்னும் எவ்வளவு இகழ்ந்தும் பரிகசித்தும் பேசினும் அதற்கு நாம் வந்தனம் புரிவோமேயன்றி அதற்காக அவர்பேரில் மனஸ்தாபப்படமாட்டோம்.

(ப்ரம்மவித்தியா) 1888ளூ அக்டோபர்மீ 31உ) ஓர் நண்பன்.

☞ இதைச்சார்ந்த சில விஷயங்கள் பின்னர் அரக்கோணம் சைவசித்தாந்தியார் என்பவருக்கும் ஷ ஓர் நண்பருக்கும் நடந்தன. அவைபயனற்ற வீண்வார்த்தைகளாய்ப் போனமையின் அவற்றை இதில் சேர்க்கவில்லை.

---

உ

சிவமயம்.

ஸ்ரீ

# சங்கராசாரியாரது அவதாரமகிமை.

இது

ஓர் இந்துவா லெழுதப்பட்டது.

——(௦)——

தத்துவ விசாரணை செய்பவர்களுக்கு உபகாரமாகச்

சிதம்பரத்தில் பிரசுரமாகும்

பிரமவித்தியா பத்திரிகையின்

அநுபந்த புத்தகத்திலிருந்தெடுத்தது.

சென்னை:

மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

1893.

இதன் விலை அணா 4; தபாற்கூலி அணா அரை.

சிவமயம்.

# சங்கராசாரியாரது அவதார மகிமை.

நாகைநீலலோசனியினது நந்தனஹு ஆடிமீ 26உ பத்திரிகையின் நான்காவது பக்கத்தில் "சங்கராசாரியார் பிறப்பின் குழப்பம்" என்றொருவிஷயம் ம-ா-ா-ஸ்ரீ ருஜீ சோமசுந்தரநாயகரெனக்கைச்சாத்திட்டாரொருவ ரெழுதியிருக்கின்றார்: அதில்முற்றும் தூஷணையும், சாஸ்திர ஆராய்ச்சிக்குறைவும், ஆத்திரமும், அபவாதமும், பெரியாரை அவமதித்தலுமே நிறைந்திருக்கின்றன. அணுவேனும் நியாயமென்பதில்லை. அது அடியிலெழுதுஞ் சங்கதிகளால் விளங்கும்.

## சங்கராசாரியர் சரித்திரங்கள்.

பிருகத்சங்கரவிஜயம்:—சங்கராசாரியர் சிஷர் பத்மபாதர் எழுதியது.

கேரளீயம்:—கேரளத்தில் ஆசாரியர் அவதாரகாலத்தில் இருந்தசேர வமிசத்தரசனது ஆஸ்தானபண்டிதரொருவரால் வரையப்பட்டது.

மற்றேநகேரளீயம்:—அத்தேசத்தில் சங்கராசாரியசிஷர் மடங்களென வழங்கும் திருசிவபுரமடங்களில் பட்டம்பெற்றவொருவராலியற்றப்பட்டது.

வியாஸாசலீயம்:—வேதங்களுக்கெல்லாம் உரைசெய்த மாதவாசாரியாரென்னும் வித்தியாரணிய சுவாமிகளால் செய்யப்பட்டது.

சங்கர விஜயவிலாசம்:—அவ்வாசாரியர் சிஷர் பரம்பரையில் உதித்த சித்விலாசமுனிவர் இயற்றியது.

சங்கர விஜயம்:—அனந்தாநந்தகிரி என்பவரால் பண்ணப்பட்டது.

சங்கராப்யுதயம்:—இராசசூடாமணி தீக்ஷிதரால் இயற்றப்பட்டது.

பதஞ்சலிவிஜயம்:—ஸ்ரீராமபத்திர தீக்ஷிதரால் எழுதப்பட்டது.

இராஜதரங்கணீ:—கல்ஹணமித்திரபண்டிதர் எழுதியது. இதில் விக்கிரமாதித்தனுக்குமுன் சங்கரர் அவதாரங் குறிக்கப்பட்டது.

இவையன்றித் துவாரகா சிலாசாசனங்களிலும் சிறிது சங்கரர் திக்விஜய சரித்திரம் எழுதப்பட்டிருக்கிறது. இன்னும் அனேக காவியங்களிலும் சங்கரர் சரித்திரம் உண்டு.

## சங்கராசாரியர் சிவாவதாரம்.

ஷை பல சங்கரர் சரித்திரங்களில் சங்கராசாரியாரைச் சிவாவதாரமென்று கூறியிருக்கின்றது. எதிர்கால சம்பவங்களைப்பற்றிச்சொல்லும் சிவரகசியத்தில் சங்கராசாரியர் சிவாவதாரமென்று சொல்லப்பட்டிருக்கிறதாகப்பிர[illegible] வித்தியா பத்திராதிபர் சொல்லியிருக்கிறார். ப்ரம்மவித்தியா 16-வது [illegible] பந்தத்திலும் 17-வது அனுபந்தத்திலும் சிவரகசியம் 15-ம் அத்தியாயத்[illegible] 16-ம் அத்தியாயத்திலுமுள்ள சுலோகங்களைப்பஞ்சாநதகே[illegible] களும், ப்ரம்மஸ்ரீ பளூர்சேஷகிரி ஐயரவர்களும் எடுத்துக்க[illegible]

அவற்றை யாவரும் பார்த்திருக்கலாம். இவர்களெல்லா மெழுதுவதற்கு முன்பு ஷை சோமசுந்தரநாயகர், ஷை அவதாரத்தை யொத்துக்கொண்டு, ஆனால் அந்த அவதாரத்தைச் சிவனடியாராகக் கூறி, அந்த அவதாரம் முன்பே முடிந்திருக்கலாமென்றும், இனியும் வரலாமென்றுஞ்சொல்லி, "அவரது வரலாறு முதலியவற்றை யிவருக் கெடுத் தோதவேண்டிய ஆவசியகமெமக்கில்லை" என்கிறார். பிறர் சொல்லும் விஷயங்களைமாத்திர மாக்ஷேபிக்கலாம்; தாம் சொல்லக் கடமைப்பட்டிருக்கிற விஷயங்களைமாத்திரஞ் சொல்லத் தமக்கவசிய மில்லையோ! பிரதிவாதியின் வக்கீல், வாதிகட்சியில் மாத்திரந் தோஷம் கற்பிக்கலாம்; வாதிக்குமாறுகப்பேசும் பிரதிவாதிமாத்திரம், வாதிவக்கீலுக்குப்பதில் சொல்ல அவசியமில்லையாக்கும்! இப்படிச் சொல்லிவிட்டால் நியாயாதிபதி யென்ன செய்யவேண்டுவது? வாதிபக்ஷத்தில்தான் நியாயமிருக்கிறது, பிரதிவாதிக்கு நியாயமில்லாமையால்தான் அவசியமில்லையென்கிறனென்று வாதிபக்ஷமே தீர்ப்புக்கொடுப்பானன்றோ? அப்படியே நாயகர் தம்கக்ஷிக்குப்பலங்காட்டாத வளையில் தமதுகக்ஷி தோல்வித்தானத்தையே யெதிர்பார்க்கு மென்பதற்கையமின்றென்க. இவர் பக்ஷத்தைச்சொல்ல இவர்க்கு அவசியமில்லாதபோது மற்றவர்பக்ஷத்தை இவர்க்குச்சொல்ல மற்றவர்க்குமாத்திர மவசியமென்னே! அங்ஙனமாக மற்றவர் சொல்வதற்குக் குற்றங் கூறவேண்டுவதேன்? பிறர்பக்ஷத்தைக் குற்றங்கூறின் அதற்குமாறுகக்கூறும் தம்பக்ஷத்துக்கு நியாயங்கூறவேண்டும்; தம்பக்ஷத்திற்கு நியாயங்கூற இயலாதபோது பிறர் பக்ஷத்துக்குத் தோஷங்கற்பிக்கப்படாது. கொள்ளெனின்வாயைத்திறப்பதுங்கடிவாளமெனின் வாயைமூடிக்கொள்வதும் நியாயமன்றே. இவர் பக்ஷத்தைச்சொல்லவேண்டிய ஆவசியக மிவர்க்கில்லை யென்றதனால் அதைச்சொன்னால் அகப்பட்டுக்கொள்வார்போல் தோன்றுகின்றது. "சந்தர்ப்பம் நேரிட்டால் சொல்லுகிறேன்" என்று சொன்னாலும் ஒருவிதத்துக்கொவ்வும். எடுத்தோத வேண்டிய ஆவசியகமே யில்லையென்றதனால் அதுவிஷயத்தில் நமக்குச்சந்தேகமாகவே யிருக்கின்றது. சோமசுந்தரநாயகருக்கு நியாயமில்லாமையினாலே ஆவசியகமில்லாமற்போகலாம்; அவருக்கு ஆவசியகமிருக்கவேண்டுமென்று எவரும்விரும்புவாருமில்லை. நமக்கப்படிப்பட்ட காரணமில்லாமையாலும் அதை யெடுத்துச்சொல்ல வேண்டிய ஆவசியகம் நமக்கிருப்பதாலும் நாம் சொல்லாமலிருக்கச் சரிப்படவில்லை. ஆதலால் அதற்கவசியமானவற்றை யெடுத்துக்காட்டுவாம்.

இவர் கூறுவதுபோல் சிவனடியார்களாகப் பிறக்கப் போவதாய்க்கூறுவதுண்மையே. தொடக்கத்தில் "பவிஷ்யச்சிவபக்தாநாமவதாராங்வதாம்யஹம்." என்று "வருங்காலத்தவதரிக்கும் சிவனடியார்சரித்திரங்களைச் சொல்வாம்" என ஸ்ரீகண்டநாதன் திருவாய்மலர்ந்தமையாலென்க. "அந்த அவதாரம் முன்பேமுடிந்திருக்கலாம், இனியும் வரலாம்" என்பதுமட்டில் பொருந்தாது. அதே அத்தியாயத்தில் "கல்யாதிமேமஹாதேவி ஸஹஸ்ரத்விதயாத்பரம்." என்றதில் "கலியுகாதி யிரண்டாயிரம்வருஷங்கள் சென்றபிறகு" எனக் காலங் குறிக்கப்பட்டமையாலும் "கேரளேசசலக்ராமே." என்றதில் "மலைநாட்டில் சசலத்தில்" என இடங்குறிக்கப்பட்டமையாலும் (மலைநாட்டில் திருவஞ்சிக்களத்துக்கு ஈசானியத்தில் காலடியென்றும் ஆலவாய் என்றும்வழங்கப்படும் ஊர் சசலம் எனப் பழையவழக்கத்தோடிப்போதுமுள்ளது) "ஸ்ரீமதாம்வியாஸஸூத்ராணாம்த்வைதவாக்யாத்மநாம்சிவே அத்வைதமேவ ஸூத்ரார்த்தம்கரிஷ்யதிநஸம்சயஃ" என்பதில் "தனித்தனி வாக்கியங்களாக வியாசமுனிவரியற்றிய சூத்திரங்களுக்கு அத்துவிதவுரை யிடுவார்" எனக் குறித்தமையாலும் "பிந்நேவைதிகஸம்ஸித்தேஹ்யத்வைதேத்வைதமார்க்கதஃ தத்

பேதகிரிவஜ்ரஸ்த்வம்ஸம்ஜாதோஸிமதம்சதஃ'' என்பதில் ''வேதஸித்தமான அத்துவிதம் துவிதவாக்கியங்களால் வேற்றுமைப்பட்டமையால் அம்மலையை யுடைக்க வச்சிரமாய் எனது அமிசத்துடன் பிறந்தவன் நீ'' என்ற சிவவசனம் வெளிப்படுவதானும் இன்னும்பல வசன உண்மைகளானுமாமென்க. ''அதில்குறித்தகாலம் முடியவில்லை, இனித்தான் அவ்வவதாரம்வரு''மென்னின், அங்ஙனமாயின் பரமசிவனது திருவாக்கு அவலமாகும். இனிச்சிவனடியார் என்பதால் சிவாம்சமாவதெப்படி யென்னின் ''ஸஜாதோஸிமதம்சதஃ'' என்பதில் ''என்னமிசத்தால்பிறந்தாய்'' என்று கண்ணுதலார் திருவாக்கு வெளிவந்தமையானும் ''விப்ரபத்நியாம்மதம்சதஃ'' ''பிராமணர் மனைவியிடம் எனதமிசத்துடன்'' என்றமையானும் ''சதுர்பிஸ்ஸஹிதச் சிஷ்யைச்சங்கரோவதரிஷ்யதி.'' ''நான்குசீடர்களுடன் சங்கரர்அவதரிப்பார்'' என்பதாலும் சிவாம்சம் உண்மையாதலறிக. சிவாம்சமாய்ப்பிறந்தவர் சிவனடியார் திருவேடங்கோடல் உரிமையேயாமென்க. அங்ஙனமே அத்துவிதஸ்தாபகரும் சிவனடியார் வேடத்தவருமான சங்கராசாரியாரைச் சிவனடியாரென்று கூறுதற்கு ஏது மாக்ஷேப மில்லையென்பதாம்.

## மாயாவாதியல்லவென்பது.

ஞானவாசிநாயகர், சங்கராசாரியாரையும் அத்துவிதிகளையும் மாயாவாதி மாயாவாதி யென்று பேசுகின்றார். அப்படிப்பேசும் நாவையுள்ளடக்கும்படி, நாம் எவ்வளவோ நியாயங்களைக்காட்டி, இவரும் இவரினத்தாருமே மாயாவாதிகளென்று வச்சிரத்தம்பமெனநாட்டி, இனித்தளர்வுறுவண்ணம் தூணுகநந நியாயஞ்செய்து விட்டமையால் இனி வாய்திறவாமல் வாளாவிருக்கவேண்டுவதவர்கடமையேயாமென்க. இனிப்பேசநாவுளதேல் நாம் கூறிய வொவ்வொன்றையும் பூர்வபக்ஷஞ்செய்து தம்பக்கத்தைத் தாபித்துக்கொள்வாராக. இதற்கிடையில் வேறே விஷயமெழுதும்போது அங்கே கொஞ்சம், இங்கே கொஞ்சம் மாயாவாதி மாயாவாதி யென நியாயமின்றிப்பேசுதல் வெற்றியை விரும்புவோர்க் கழகன்று.

## சிவன் சிவனடியாராய் வருதலைப் பற்றியது.

பரமசிவன் திரிமூர்த்திகளுக்கு அதீதமென்றும் அவர் மாதாவயிற்றில் யோனிவாய்ப் பட்டுப்பிறப்பது கூடாதென்றுங்கூறி, தாம் கூறும்சிவனடியாராக மாத்திரம் அவதரிக்கலாமென்று வரைகின்றார். சிவனடியாராக வருவதானால் அதுமாத்திரமெப்படிக்கூடுமோ? சிவன் எங்கும்பரிபூரணர், நிர்மலர், நிஷ்களர், நிர்ச்சலர், நிர்க்குணர், வாக்குமனாதீதர், ஞாதுருஞான ஞேயங்களற்றவர், சங்கற்ப விகற்பமற்றவர். இப்படிப்பட்டவர் மாமிசநரம்பு என்பு உதிரம் சீமுதலிய அநுசிதசரீரத்தோடும் ஞானேந்திரிய கருமேந்திரிய அந்தக்கரணங்களோடும் கூடி மானிடவுருவந்தாங்கி வருவதுமாத்திரங்கூடுமோ? அப்படி வந்தாலும் வரட்டும். அப்படிவந்தவடிவம்காரணமா? காரியமா? ஏதுமுன்னில்லாதிருந்து தோன்றுகின்றதோ அதுகாரணமன்று; காரியமேயாம். சிவனடியார் உருவம் காரியமானபோது அவ்வடிவந்தோன்றுதற்கு முதற்காரணம் யாது? பரிபூரண துரிய சிவமென்று சொல்லாவிடில் வேறேமார்க்கமில்லை. காரணமான அந்தச்சிவத்திலிருந்து காரியமான சிவனடியார்வடிவம் வெளிப்பட்டு வந்ததாகவேண்டும். காரணத்தினின்றும் காரியம் வருவதுஎதுபோல்? மாதாவினின்றும் குழவிவருவதுபோலா? பாலினின்றும் தயிர் வருவதுபோலா? விதையிலிருந்து விருட்சம் வருவதுபோலா? நீரினின்றும் அலையாதி வருவது போலா? பிம்பத்தினின்றும் பிரதிபிம்பம் தோன்றுவது போலா?

மண்ணினின்றும் கடமுண்டாவதுபோலா? கயிற்றினின்றும் அரவுண்டாதல் போலா? இவைகளல்லாவிடில் வேறெதுபோல்? இந்தவுவமானங்களை யெல்லாம் முறையே விசாரிப்பாம்.

## பின்னவாதம்.

மாதாவினின்றும் குழவிவருவது போலென்னின் அது கூடாது. மாதா கண்டப்பொருள். ஆதலால் அவளில்லாத வேறொரிடத்திற்குப் பிள்ளை வரலாம். இவ்வுவமானப்படி மாதாஸ்தானத்தில் சிவனும் குழவிஸ்தானத்தில் சிவனடியாருமாம். குழவியென்பது தாயினதோர்பாகமான சோணிதமும், வெளியிலிருந்துட்சென்ற சுக்கிலமும் வெளியிலிருந்துட்சென்ற ஆகாரமுமாம். இதை யாராய்ந்துழிக் குழவியென்பது தாயின்பாகமும் தாய்ப்பாகம் நீங்கலாக வெளியிலிருந் துட்சென்ற சுக்கில ஆகாரபாகமும் என விளங்குகின்றது. இவ்வாறே யுவமேயத்தை நோக்குழிச் சிவனடியாரென்பது சிவனுடைய வோர்பாகமும், சுக்கில ஆகாரம்போன்ற பிறிதொருபாகம் சிவனுட்சென்றதுமாம். மாதா கண்டிதப்பொருளாகலின் அவளுடைய வோர்பாகமான சோணிதம் குழவிவடிவாய் அவளில்லாவிடத்தில் வரக்கூடும். சிவன் பரிபூரணராகலின் சிவனுடையவொருபாகம் அவரில்லாவிடத்தி லெப்படி வரக்கூடும்? அவரில்லாவிடமின்றே. மாதாவினது வயிறு கெட்டியல்லாத புரையுடையதானதாலும், மாதா கண்டப்பொருளானதாலும் மாதாவில்லாத பிறிதொரு இடத்திலிருந்து சுக்கில, ஆகாரங்கள் புரையுள்ள மாதாவினுதரத்திற் சென்று சோணிதத்துடன் ஒன்று கூடி, குழவியாய் வெளிப்படலாம். சிவன் கெட்டிப் பொருளன்றோ? புரையுள்ளபொருளோ? அந்தப்புரையில் பிறிதொரு பொருள்சென்று சிவனுடையபாகமுஞ்சேர்ந்து சிவனடியாராய் வெளிப்பட்டதோ? மாதாவின் சோணிதம்போல் சிவனுடைய வோர்பாகமானல் சுக்கிலஆகாரங்கள் போல மற்றப்பொருள் வேண்டுமே.அதுவுஞ்சேர்ந்தாலன்றோ சிவனடியாராய் வரலாம். அந்தப்பொருள் யாது? சித்தா? சடமா? சித்தானல் ஞானமயமான சிவனுடன் கூடிடும்; சடமானல் கூடாதே. சிவனடியாராய் வந்த மானிடவுருவில் ஆன்மபாகம் சித்து, சரீரபாகம் சடம். ஆன்மாவும் சிவனும் சித்தாயிருப்பதால் சிவனே ஆன்மாவாயிற்றென்று வைத்துக்கொண்டாலும் (இதிலும் அனேகதோஷங்களிருக்கின்றன) சடமெங்கிருந்து வந்தது? தாயில்லாத இடத்திலிருந்து ஆகாரம் வயிற்றுக்குட்புகுந்தது போன்று சிவனில்லாத விடத்திலிருந்து சடம்சிவனுட்புகுந்ததாக வேண்டும். (சித்துவந்து புகுந்ததென்முலுமிந்தத்தோஷம்வரும்) புகுந்ததென்று சொல்லும் பக்ஷத்தில் சிவனுக்கப்புறம் ஒரு இடமிருக்கவேண்டும். அது பெரிதோ? இது பெரிதோ? இந்தச்சிவனுக்கும் அந்தச்சடத்துக்கும் வேற்றுமைதோன்ற வேலிபோன்ற தொன்றிருத்தல் வேண்டும். அதுயாது? தாயினதோர்பாகமான சோணிதம் குழவியாகக்கழிந்தால் அவ்வளவு பாகம்தாய்க்குக் குறைவுபடும். அவ்வாறே சிவனிடமிருந்து சிவனடியாருருவிற்காக வோர்பாகம் எடுக்கப்பட்டால் சிவனுக்கு அந்தவோர்பாகம் குறைவுபடுமே. இன்னும் இவ்வாறு அனேகஆக்ஷேபங்களிருக்கின்றன. சோமசுந்தரநாயகர் இதைப்பூர்வபக்ஷஞ் செய்வாரானல் அப்போது அவைகளை வெளியிடுவோம்.

## பரிணமவாதம்.

பாலினின்றும் தயிர் வருவதுபோல் என்பதைப் பார்ப்போம். பாலினின்றும் தயிர்வருவதுபோல் சிவனினின்றும் சிவனடியார் உருவந் தோன்றுகின்றதென்னின் பால் தனது ஸ்வரூபங்கெட்டுத் தயிராகின்றது.அன்றித் தயிரான காலத்தில் பாலில்லாமற்போகிறது. அவ்வணமே தூரிய சிவன் சிவனடி

யாரானபோது துரிய சிவனே இல்லாமற் போகின்றார். பால் தன் வடிவ மாறித் தயிரானால் பின்னும் பாலாவதில்லை. அங்ஙனமே சிவன் சிவவடிவங் கெட்டுச் சிவனடியாரானால் பின்னும் சிவனாதல் கூடாது. இந்தப் பரிணாம வாதத்தால் பாலுக்கு விகாரமுண்டாவதுபோலச்சிவனுக்கும் விகாரமுண்டாகின்றது. பால் தன்னுருவங்கெட்டுத் தயிரானால் தயிர் தயிராகவே யிராது. அதுவும் தன்னுருக்கெட்டு வேறொன்றாகி, அதுவுங்கெட்டு வேறொன்றாகி, இவ்வாறு கெட்டுப்பலமாறுதல்களையடையும். அரும்பு பூவாதலும், பூபிஞ்சாதலும், பிஞ்சுகாயாதலும், காய்கனியாதலும், கனியும்நாட்படத்தன்னுருக் கெட்டுப்போதலும் இன்னுமிவ்வாறு பலப்பலவாதலும் அப்பரிணாமவாதத்தின் குற்றமாம். இவ்வாறு சிவன் தனது வடிவங்கெட்டுச்சிவனடியாராயின், பின் அவ்வடிவங்கெட்டு வேறொன்றாய், பின் அதுவுங்கெட்டு வேறொன்றாய், பின் அதுவுங்கெட்டு வேறொன்றாய் இவ்வாறு பல விகாரங்களையடையும். சிவனடியார் வடிவமிதற்கு முன்னரே தோன்றி இருக்குமாயின் அதன்பின் அனேக மாறுதல்களை யடைந்து இப்போதும் ஒருவிகாரத்தோடிருக்கிறதாய்ச் சொல்லவேண்டும். அப்படியாயின் இப்போது இவ்வித விகாரத்தோடிருக்கிறதாய்ப் பூர்வபக்ஷியாரே சொல்லக் கடமைப்பட்டவரா யிருக்கின்றனர். பால் தயிராகிறதினால், தானே தயிராவதில்லை. அனேகவகைச் சாதனங்கள் வேண்டும். சிவனே சிவனடியாராகும்பட்சத்திலும் அவ்வாறு அனேக சாதனங்கள் வேண்டும். பால் கண்டவஸ்துவாகலின் பாலில்லாத மற்றவிடங்களில் பலவகைச் சாதனங்க ளிருக்கின்றன. சிவன் பரிபூரணராகலின் வேறு சாதனங்களிருக்க இடமிராது.

## மற்றொருபரிணாமவாதம்.

பாலினின்றும் தயிருண்டாவதுபோலென்று சொல்வதில் இவ்வளவு அனர்த்தத்திற்கிட முண்டாகின்றமையால் இதைத்தள்ளி விதையினின்றும் விருக்ஷமுண்டாகும் உவமானத்தைப்பொருத்திப்பார்ப்போம். இதுவும் ஓர்வித பரிணாமமாய் மிக ஆக்ஷேபத்திற்கிடமாம். விதைவெகுசிறியது; அதினின்றும் பெரிய விருக்ஷமுண்டாவதொருபோது மின்று. விதை கால் பலமென்றும் விருக்ஷம் ஒரு பாரமென்றும் வைத்துக்கொள்வோம். வைத்துக்கொண்டு பார்க்கின் காற்பல எடையிலிருந்து ஒருபார எடை எப்படிவரும்? வாராதென்பது திண்ணம். பின்னையெப்படி? கால்பலவிதையோடு நீர், வாயு, பிருதிவியாதி அணுக்கள் முதலியன 6399¾ பலஞ்சேர்ந்து ஒரு பார விருக்ஷமாகின்றது. ஆதலால் காற்பலத்திலிருந்தே ஒருபாரமான காரியவிருக்ஷமுண்டாகின்றதென வுரைத்த லமையாது. காரியமான விருக்ஷம் எவ்வளவு எடையோ அவ்வளவு எடை காரணமான வித்திலில்லையெனத்தெரிகிறது. காரணமான காற்பலத்துடன் 6399¾ பலம் நீர் முதலியசேர்ந்து காரியமாகின்றது. காற்பலவித்தும் 6399¾ பலம் நீர்முதலனவுஞ்சேர்ந்து காரணமாகி, அவற்றின் கலத்தலே காரியமென்று கூறப்படுகின்றது. ஆதலால் காரணத்தின் கூட்டத்தையன்றிக் காரிய மென்பதற்குப் பொருளில்லை. இதனால் காரணப் பொருளின் மாறுதலையே காரியப்பொருளென விவகாரநிமித்தஞ் சொல்லப்படுகின்றது. காரணத்திற்கு எப்படிப்பொருளுளதோ அப்படியே காரியத்திற்குப் பொருளில்லை. காரியம் வெறுந்தோற்றமேயாம், தோற்றமான காரியம் சத்தாகாது; அசத்து அல்லது சத்துப்போலியேயாம். ஆதலால் வித்தும் அதன்சேர்க்கையும்சேர்ந்துகாரணமாகிச்சத்தாயும், விருக்ஷம் காரியமாகி அசத்து அல்லது சத்துப்போலியாயு மாகின்றன.

இதன்படி யுவமேயத்தைப் பார்க்கின் வித்து ஸ்தானத்தில் துரியசிவனும் விருக்ஷ ஸ்தானத்தில் சிவனடியாருமாகின்றார்கள். வித்துடனே நீர் முதலி

யவை சேர்ந்து எப்படி விருக்ஷமாகின்றதோ, அப்படியே துரியசிவனுடன் ஏதோ சில பொருள்கள் சேர்ந்து சிவனடியாராக வேண்டும். வித்து ஏகதேசப் பொருளானமையின் வித்தில்லாப் பிறவிடங்களிலுள்ள நீர்முதலியன வந்து சேர்ந்து விருக்ஷமாகலாம். அவ்வாறு துரியசிவன் ஏகதேசப்பொருளன்றே; பரிபூரணப் பொருளாயிற்றே; அஃதில்லா இடமின்றே. அஃதில்லா இடமிருந்தாலன்றே மற்றப் பொருள் இருக்கவாவது அது துரிய சிவனுடனே வந்து சேரவாவது கூடும்? அங்ஙனமின்மையின் துரியசிவனுடன் வேறுபொருள் வந்து சேர்ந்து சிவனடியாராய்வருமென்பது கூடாது. வித்து அற்பவிடத்திலிருக்கும் அற்பப் பொருள்; நீர் முதலியன அதிகவிடத்திலிருக்கும் அதிக பொருள்கள். ௸ அற்பப் பொருளும் அதிக பொருளுஞ் சேர்ந்தே விருக்ஷமாகின்றது. அவ்வாறு துரியசிவன் அற்ப இடத்திலிருக்கும் அற்பப் பொருளாகவேண்டும்; அத்துரிய சிவனுடனே கூடிடத்தக்க அதிக இடத்திலிருக்கும் அதிக பொருளுஞ்சேர்ந்து சிவனடியாராகவேண்டும். அப்படிச் சேரும் அதிக இடத்திலுள்ள அதிக பொருள்யாது? துரியசிவன் பூரணரெனவும் பெரும்பொருளுக் கெல்லாம் பெரும்பொருளெனவும் பிரபலப்ரமாணங்களான வேதமுதலிய பதினான்கு வித்தைகளுங் கோஷிக்கின்றனவே. அங்ஙனமாகத் துரியசிவனை அற்பப்பொருளாகவும் ஏகதேசப் பொருளாகவும் இன்னதென விளங்கா மற்றப் பொருளைப் பெரிய பொருளாகவும் சொல்வதுகூடுமா? அவைகள் ஒருங்குசேர்ந்த சேர்க்கையைச் சிவனடியாராகச் சொல்வதுதான் பொருத்தமாமோ? வித்தானது தனது இயல்புகெட்டே விருக்ஷமாகின்றது. அங்ஙனமே துரியசிவனும் தனது இயல்புகெட்டே சிவனடியாராக வேண்டும். இவ்வளவு யுத்தமிருப்பதால் வித்தினின்றும் விருக்ஷ முண்டாவதுபோலெனச் சொல்லு முவமானமும் பயனில் உவமானமெனச் சோமசுந்தரநாயகர் அறியக்கடவர்.

## அம்சாம்சிகவாதம்.

அம்சம் என்றால் கூறு; அம்சிகமென்றால் கூற்றையுடையது. நீர் அம்சிகம்; நீரின்கணுண்டாகின்ற அலையாதிகள் அம்சம். நீரினிடத்து அலையாதிகளுண்டாவதுபோல் துரியசிவனிடத்தினின்றும் சிவனடியார் உண்டாகின்றாரென்னின் இதுவும் ஆக்ஷேபத்திற்கே யிடனாம். நீரின்கண் அலையாதிகளுண்டாக வேண்டுமானால் நீர் விகாரப்பட்டே யுண்டாகவேண்டும். அங்ஙனமே துரிய சிவன் சிவனடியாராய் வரவேண்டுமாயின் துரியசிவன் விகாரத்தையடைந்தே சிவனடியாராய் வரவேண்டும். விகாரமற்ற துரிய சிவனுக்கு விகாரஞ் சொல்லுவது கூடாது; அன்றிச் சிவன் நிர்விகாரியென்று பேசும் வேதாகம புராணேதிகாசங்களுக்கு விரோதமுமாகும். அதுநிற்க, நீர் அலையாதிகளாக வேண்டுமாயின், தான், தானில்லாத விடத்திலேதான் ஆகவேண்டும். அப்படியாகுமென்று சொல்லின் சிவன் நிறைவில்லா அபரிபூரணப்பொருளாகின்றார். நீர் அலையாதிகளாக வேண்டுமாயின் அசைதலான தொழில் நிகழ்ந்தே ஆகவேண்டும். எப்போது அசைதலுண்டாகின்றதோ அப்போது அசைதல் தொழில் நிகழ்வதற்குத் தானில்லா இடம் வேண்டும். ஒரு பாத்திரத்தினிறைய நீர்வார்த்து மேலே மூடிவைத்துவிட்டால் அந்நீர் அசைதலுறுமா? நீர்குறைந்திருந்தாற்றானே அசைதலுண்டாம். அப்படியே சிவன் நிறைவில்லாமல் குறைவாய் இருந்தாற்றானே அசைதலுண்டாம்;. இதுவும் நிற்க, நீர் அலையாவதற்கு நீருக்கு வேறாயிருக்கும் காற்று ஒன்று அவசியம்வேண்டும். காற்று இல்லாவிடில் அலையாதிகளுண்டாகா. அங்ஙனமே துரிய சிவன், சிவனடியாராவதற்குக் காற்றைப்போன்ற பொருளொன்று வேண்டும். அந்தப்

